மாலை 46 மணி 7 ஜூலை 2004 விலை ரூ.10



# திருக்கோயில்

இந்து சமய அறநிலைய ஆட்சித் துறை வெளியீடு

அனில் அக்னிக்குண்டத்தில் இறங்கும் அதிசயத் திருத்தலம்

காசநோய், புற்றுநோய் குணமாகும் அற்புதம்

பூதம், பேய், பிசாசுகள் விரட்டும் திருப்புகழ் மந்திரமாலை

கயிலையே மயிலை மயிலையே கயிலை அருள்மிகு கபாலீசுவரர் திருக்கோயில் சிறப்புகள்

திருக்கழுக்குன்றத்திற்கு அண்மைக் காலத்தில் கழுகுகள் வருவதில்லையே ஏன்?

- சுவையான கேள்வி-பதில்

# A FEW THINGS TO CHECK BEFORE YOU DRIVE


TYRES


ENGINE OIL


WINDSHIELD WIPERS


HEADLIGHTS


HORN


BRAKES :

"Have genuine Sundaram-Clayton Spares been used?

Improper maintenance of air-brake and use of spurious spares would be hazardous. Both to you and the innocents on the road.

Which is why you need to insist on buying Sundaram-Clayton genuine spares. Air brake components that go through stringent quality tests. An uncompromising attitude that has put us on the original equipment supplier list of all commercial vehicle manufacturers. Choose Sundaram-Clayton spares. Play it safe.




Buy genuine Sundaram-Clayton Spares






# திருக்கோயில்

திருவள்ளுவர் ஆண்டு 2035 தாரண – ஆடி

மாலை–46 மணி –7 ஜூலை 2004


# அன்பார்ந்த வாசகப் பெருமக்களே!

வணக்கம்.

"ஞானத்தின் திருவுரு" வாகத் திகழும் திருஞானசம்பந்தர் குருபூசைத் திருநாளாம் வைகாசி மூல நன்னாளில் (4.6.04) திருக்கழுக்குன்றத்தில் திருஞானசம்பந்தர் இசைவிழாவை நம் அறநிலையத்துறை மிகச் சிறப்பாகக் கொண்டாடியுள்ளது.

சைவ சமயக் குரவர்கள் எனப் போற்றப்படும் நால்வரில் அம்பிகையின் ஞானப்பால் உண்ட ஆளுடைய பிள்ளையாரையே நம் அருளாளர்கள் முதலாமவராக வைத்துப் போற்றிவருவதைப் பின் வரும் சேக்கிழார் புராணப் பாடலால் நாம் நன்கு அறியலாம்.

**"பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி!**
**ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி!**
**வாழி திரு நாவலூர் வன் தொண்டர் பதம் போற்றி!**
**ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள் போற்றி!"**

என்று உமாபதிசிவம் அவர்கள் திருஞானசம்பந்தரை முதலாமவராக வைத்து சமயக் குரவர்கள் நால்வரையும் வாழ்த்திப் பாடுகின்றார்.

சமயக்குரவர்கள் நால்வரில் மிகக் குறைந்த காலமே இப்பூவுலகில் வாழ்ந்து பெருஞ்சாதனைகள் பல நிகழ்த்திய பெருமைகளுக்கு உரியவர் **"பரசமயக் கோளரி"** எனப் புகழப்படும் நம் திருஞானசம்பந்தர் ஆவார்.

இப்பூவுலகில் அவர் வாழ்ந்திருந்த ஆண்டுகள் 16 ஆண்டுகள் மட்டுமே ஆகும்.

**"புண்ணிய பதினாறாண்டுப் பேர்பெறும்**
**புகலிவேந்தர்"**

என்று அவர் வாழ்ந்திருந்த ஆண்டுகளைச் சிறப்பித்துப் போற்றுகின்றார் சேக்கிழார் பெருமான்.

பிறநாயன்மார்களுக்கு இல்லாத அளவு மிக அதிகமான பாடல்களில் - 1253 பாடல்களில் "திருஞானசம்பந்தர் பாதமலர் தலைக்கொண்டு" அவர் திருத்தொண்டினைப் பரவிப் போற்றுகின்றார் சேக்கிழார் பெருமான். ஆகவே அவருடைய பெரிய புராணத்திற்குப் "பிள்ளை பாதி, புராணம் பாதி" எனச் சிறப்புப் பெயரும் உண்டு.

வேதியர் குலத்தில் தோன்றிய திருஞானசம்பந்தர், பாணர் குலத்தில் தோன்றிய திருநீலகண்ட யாழ்ப்பாணரைத் தோழராய்க் கொண்ட பெருஞ்சிறப்பும், அவரை **"ஐயரே!"** என அகமலர அழைத்துப் பெருமைப்படுத்திய அருஞ்சிறப்பும் இறையடியார்களுக்குச் சாதி இனபேதங்கள் இல்லை என்பதை நன்கு தெளிவு படுத்துகின்றது.

திருவீழிமிழலையில் பஞ்சம் வாட்டியபோது இறைவரிடம் படிக்காசு பெற்று மக்கள் தொண்டே மகேசன் தொண்டாக அவர் ஆற்றிய சமூகப்பணியை அருளாளர்கள் போற்றிப் புகழ்கின்றனர். இல்லறத்தை நல்லறமாய்ப் போற்றி யாவரும் **"மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம்"** என்று அறிவுறுத்திய அருளாளர் திலகம் நம் திருஞானசம்பந்தர்.

திருமயிலையில் அஸ்திக் குடத்தில் சாம்பலாய் இருந்த "அங்கம் பூம்பாவை"யை அற்புதத் திருப்பதிகம் பாடி ஐந்தாண்டுகளுக்குப் பிறகு உயிர்ப்பித்துத் தந்த திருஞானசம்பந்தர் தம் பேரருள் ஆற்றலை இப்பிறவியில் போற்றாதார் யார்?

நம் சைவ சமயத்தின் கண்ணாக விளங்கும் திருஞானசம்பந்தரை நாமும் நம் தலை மேற் கொண்டு என்றென்றும் போற்றி அவர் வாழ்ந்து காட்டிய அன்பு நெறியில், தொண்டு நெறியில் வாழ்ந்து இன்புற்றிடுவோமாக!

அன்புடன்,

**[ஜி. இராமகிருஷ்ணன், இ.ஆ.ப.]**

ஆணையர், இந்து சமயஅறநிலைய ஆட்சித்துறை

# மேலும் ஒன்பது திருக்கோயில்களில் அன்னதானத் திட்டம்




மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் அவர்கள் திருமயிலை அருள்மிகு கபாலீசுவரர் திருக்கோயிலில் 23.3.02 அன்று திருக்கோயில் அன்னதானத் திட்டத்தைத் தொடங்கி வைத்து அன்னதான உண்டியலில் தம் காணிக்கையைச் செலுத்துகிறார்கள்.

மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் அவர்களின் ஆணையின்படி 14.06.2004 முதல் மேலும் 9 திருக்கோயில்களுக்கு அன்னதானத் திட்டம் விரிவுபடுத்தப்பட்டு உள்ளது.

அந்த ஒன்பது திருக்கோயில்களின் விவரம் பின்வருமாறு :

1. அருள்மிகு அகஸ்தீஸ்வரர் திருக்கோயில், வில்லிவாக்கம், சென்னை மாவட்டம்
2. அருள்மிகு வடாரண்யேஸ்வர சுவாமி திருக்கோயில், திருவாலங்காடு, திருவள்ளூர் மாவட்டம்.
3. அருள்மிகு வில்வநாதீஸ்வரர் திருக்கோயில்,
   திருவலம், காட்பாடி, வேலூர் மாவட்டம்
4. அருள்மிகு காடுஅனுமந்தராய சுவாமி திருக்கோயில், தாராபுரம், ஈரோடு மாவட்டம்.
5. அருள்மிகு நீலிவனேஸ்வரர் திருக்கோயில், திருப்பைஞ்ஞீலி மணச்சநல்லூர், திருச்சிமாவட்டம்.
6. அருள்மிகு முத்துமாரியம்மன் திருக்கோயில், கொன்னையூர்,
   திருமயம், புதுக்கோட்டை மாவட்டம்.
7. அருள்மிகு சௌரிராஜப் பெருமாள் திருக்கோயில், திருக்கண்ணபுரம், நன்னிலம், திருவாரூர் மாவட்டம்.
8. அருள்மிகு சொக்கநாத சுவாமி திருக்கோயில், அருப்புக்கோட்டை, விருதுநகர் மாவட்டம்.
9. அருள்மிகு சுயம்புலிங்க சுவாமி திருக்கோயில், உவரி, இராதாபுரம், திருநெல்வேலி மாவட்டம்.

மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் அவர்கள் 14.06.2004 முதல் அன்னதானத் திட்டத்தைச் செயற்படுத்த ஆணையிட்டுள்ள இந்த ஒன்பது திருக்கோயில்களையும் சேர்த்துத் தமிழகத்தில் அன்னதானத் திட்டம் செயற்படுத்தப்படும் திருக்கோயில்களின் எண்ணிக்கை 171 ஆக உயர்ந்துள்ளது.

**யானைகள் புத்துணர்ச்சி முகாம்**

மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் அவர்களின் அறிவுரையின்படி, யானைகள் புத்துணர்ச்சி முகாம் கடந்த 16.11.03 ஆம் நாள் துவங்கப்பட்டது. அடைபட்டுக்கிடந்த யானைகளுக்கு, உடல் ரீதியாகவும் உள ரீதியாகவும் புத்துணர்ச்சி அளிப்பதே இந்தச் சிறப்பு முகாமின் நோக்கம் ஆகும். மேலும், யானைகளை ஒன்றுக்கொன்று இணக்கமாக இருக்கச் செய்தல், மக்களுடன் நன்கு பழகச் செய்தல், நல்ல சூழ்நிலை



# அறநிலையத் துறை ஆற்றிவரும் அறப்பணிகள்

- திருமிகு ஜி. இராமகிருஷ்ணன் இ.ஆ.ப.
ஆணையாளர், இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை

ஏற்படுத்துதல் போன்ற வகைகளில், யானைகள் பயனடைந்துள்ளன.

திருக்கோயில்களுக்குச் சொந்தமான 37 யானைகளும், மடங்கள் மற்றும் தனியாருக்குச் சொந்தமான 18 யானைகளும் வனத்துறைக்குச் சொந்தமான 45 யானைகளும் ஆக மொத்தம் 100 யானைகள் இம்முகாமில் கலந்து கொண்டன. இம்முகாம் 30 நாட்களுக்கு நடத்தப்பட்டது. இம்முகாமில் நல்ல மருத்துவ சிகிச்சைகளும், இயற்கையான சூழ்நிலையில் நல்ல சத்துணவும், சிறப்பான பயிற்சிகள், ஆற்றுக் குளியல் போன்ற அனைத்து வசதிகளும் செய்து கொடுக்கப்பட்டன.

மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் அவர்களின் அறிவுரையின்படி, இப்புத்துணர்ச்சி முகாம் இனி ஆண்டுதோறும் 45 நாட்களுக்கு நடத்தப்படும்.

**மகாமகம் :**

கும்பகோணம் நகரில் அமைந்துள்ள பிரசித்திப்பெற்ற மகாமகத் திருக்குளத்தில் ஆண்டுதோறும் மாசி மாதத்தில் மகத்



# திருக்கோவில்களின் அன்னதானத் திட்டத்திற்கு மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் அவர்கள் 6 மாத சம்பளம் நன்கொடை



மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் அவர்கள் 2002 ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் முதல் தமது சம்பளத்தைத் திருக்கோயில்களில் செயற்படுத்தப்பட்டு வரும் அன்னதானத் திட்டத்திற்காக ஒவ்வொரு மாதமும் ஒரு திருக்கோவிலுக்கு என வழங்கி வருகிறார்கள்.

2003 ஆம் ஆண்டின் நவம்பர் மாத சம்பளத்தொகை ரூ. பத்தாயிரத்தைச் சென்னை திருவல்லிக்கேணி அருள்மிகு பார்த்த சாரதி சுவாமி திருக்கோயிலின் துணை ஆணையர் திருமிகு ஆ. குப்புசாமி பி.ஏ.பி.எல் அவர்களிடம் வழங்கினார்கள்.

2003 ஆம் ஆண்டின் டிசம்பர் மாத சம்பளத்தை சென்னை நுங்கம்பாக்கம் அருள்மிகு அகத்தீசுவரர் பிரசன்ன வெங்கடேசப் பெருமாள் திருக்கோயிலுக்கும், 2004 ஆம் ஆண்டின் ஜனவரி மாத சம்பளத்தைத் திருச்சி மாவட்டம் சமயபுரம் அருள்மிகு மாரியம்மன் திருக்கோயிலுக்கும், பிப்ரவரி மாத சம்பளத்தை தஞ்சை மாவட்டம் புன்னைநல்லூர் அருள்மிகு மாரியம்மன் திருக்கோயிலுக்கும், மார்ச்சுமாத சம்பளத்தை நாகை மாவட்டம் வைத்தீஸ்வரன் கோயில் அருள்மிகு வைத்திய நாதசுவாமி திருக்கோயிலுக்கும், ஏப்ரல் மாத சம்பளத்தை பழநி அருள்மிகு தண்டாயுத பாணி சுவாமி திருக்கோயிலுக்கும் அன்னதானத் திட்டத்திற்கென வழங்கினார்கள்.

திருவிழாவும், 12 ஆண்டுகளுக்கு ஒருமுறை மகாமகப் பெருவிழாவும் தொன்று தொட்டு சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகிறது.

இந்த மகாமகப் பெருவிழாவன்று கும்பகோணம் மாநகரில் அமைந்துள்ள 12 சைவத் திருக்கோயில்களின் உற்சவ மூர்த்திகள் மகாமகத் திருக்குளத்திலும், 5 வைணவ திருக்கோயில்களின் உற்சவ மூர்த்திகள் காவிரிக் கரையிலும் எழுந்தருளி, பக்தர்களுக்குத் தீர்த்தவாரி காட்சி அளிப்பது வழக்கம்.

இந்த ஆண்டு மகாமகப் பெருவிழா கும்பகோணம் மாநகரில் அனைத்து தரப்பினரும் பாராட்டும் வகையில் 06.03.04 அன்று மிகச் சிறப்பாக நடைபெற்றது.

மகாமகத் தீர்த்தவாரி நடைபெறும் மேற்படி 17 திருக்கோயில்கள் மற்றும்

மகாமகத்திருக்குளத்தைச் சுற்றி அமைந்துள்ள 16 சன்னதிகள் மற்றும் காவிரி தீர்த்தவாரி மண்டபம் ஆகியவை சுமார் ரூ. 111 இலட்சம் மதிப்பில் திருப்பணி செய்யப்பட்டது. சுமார் ரூ.60 இலட்சம் மதிப்பிலான பணிகள் உபயதாரர்கள் மூலமும், இதரப் பணிகள் திருக்கோயில் நிதி மற்றும் அரசு மானியம் மூலமும் மேற்கொள்ளப்பட்டது. அரசு மானியமாக ரூ. 44.58 இலட்சம், அரசாணை எண் 220 தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத்துறை நாள் 31.10.2003ன்படி வழங்கப்பட்டது.

திருப்பணி வேலைகள் முடிக்கப்பட்டு அனைத்து 17 திருக்கோயில்களின் குடமுழுக்கு நிறைவு பெற்றுள்ளது.

**திருக்கோயில் திருப்பணி :**

**ஆதிதிராவிடர்கள்(பிற்படுத்தப்பட்டோர்) வாழும் பகுதியிலுள்ள திருக்கோயில் திருப்பணி**

இத்துறை ஆளுகையின்கீழ் இல்லாத ஆதிதிராவிடர்கள் (பிற்படுத்தப்பட்டோர்) வாழும் பகுதியிலுள்ள மக்கள் தாங்கள் வழிபடும் தெய்வங்களுக்குத் திருக்கோயில்கள் அமைத்துத்தர வேண்டும் என்ற அவர்களது நீண்டநாள் கோரிக்கையை நிறைவேற்றித்தரும் பொருட்டு ஏற்கனவே உள்ள திருக்கோயில்களைக் கட்டித்தரவும். திருக்கோயில் ஒன்றுக்கு ரூ.25,000/- வீதம் இவ்வாண்டு 6000 திருக்கோயில்களுக்கு ரூ. 15 கோடி செலவில் இத்திட்டத்தினை விரைந்து செயல்படுத்தவும் துரிதநடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுவருகின்றன.

தமிழ்நாட்டில் ஆழ்வார்களாலும் நாயன்மார்களாலும் பாடிப் போற்றப்பட்ட புகழ்மிகு புனித திருத்தலங்கள் பல உள்ளன. எனவே, இவற்றையும் வரலாற்று முக்கியத்துவம் மற்றும் தொல்பொருள் முக்கியத்துவம் வாய்ந்த திருக்கோயில்களையும் நன்முறையில் பேணிப் பாதுகாத்துவர அவற்றிற்குத் திருப்பணி செய்வது இன்றியமையாததாகும். மேலும் வேறு சில முக்கியமான திருக்கோயில்களுக்கும் திருப்பணி செய்தல் அவற்றிற்கு பழுது பார்த்தல் ஆகியவை பின்வரும் நிதியாதாரங்களிலிருந்து மேற்கொள்ளப் படுகின்றன. (பொதுமக்கள் அளிக்கும் நன்கொடைகள் அவர்களின் ஆர்வத்தின் ஈடுபாட்டின் வெளிப்பாடாகக்

## வாசகர் எண்ணங்கள்



## ஏதைப் புகழ்வது?

கோயில்கள் கும்பாபிஷேகம் பெற்றவுடன் புதுப்பொலிவுடன் கம்பீரமாக விளங்குவதைப் போல, திருக்கோயில் புத்தகம் புதுமையான செய்திகளுடனும் வழவழப் பேப்பரில் வண்ண வண்ணப் படங்களுடனும் நிறைய பெட்டிச் செய்திகளுடனும் உலா வருவது மனதுக்கு மிகுந்த குதுகலத்தைத் தருகிறது.

முன், பின் அட்டையில் உள்ள திருவல்லிக்கேணி பெருமாளின் படம் ரொம்ப அருமை. ஸ்ரீரங்கத்தில் தான் வருடம் பூராவும் உத்ஸவம் என்றும், அதுவும் ஒரே பெருமாளான ரங்கநாதருக்கு மட்டும் தான் என்று சொல்வது உண்டு. திருவல்லிக்கேணியிலும் வருடம் முழுவதும் உத்ஸவம், ஆனால் அங்குள்ள ஐந்து பெருமாள்களுக்கும் தனித்தனி உத்ஸவம் என்பதை அழகாக வெளியிட்டிருக்கிறீர்கள். அறநிலையத் துறை ஆற்றிவரும் அறப்பணிகள் பற்றிய விவரம், சேக்கிழார், அப்பர், ஞானசம்பந்தர் பற்றிய உரைகள், அருமையான தலையங்கம் என்று ஒவ்வொன்றும் ஒன்றை ஒன்று விஞ்சும் வகையில் இருப்பதால் எதைப் புகழுவது என்றே தெரியவில்லை. பிரதோஷத்தில் 9 வகைகள் இருக்கிறதா என்று வியக்கவைக்கிறது. காஞ்சி கருட சேவை மெய்சிலிர்க்க வைக்கிறது.

நன்றியுடன்

**இந்திரா ஆராவமுதன்**

6, ஸ்ரீரங்கம் அபார்ட்மென்ட்ஸ்
16, காந்தி ரோடு
ஸ்ரீரங்கம் - 620006

கருதப்படுகிறது) பொதுமக்கள்/உபயதாரர்கள் பங்கு, திருப்பணிகள் நாட்டம், பொதுமக்கள்/உபயதாரர்கள் முன்வரும் பணிகள் சிறப்பாக நடைபெற்றுத் தொடர்ந்து கோயில் பராமரிக்கப்படுகிறது. ஆகவே, பொது மக்கள் பங்கேற்பினை அரசு ஊக்குவிக்க பொது நிதிகளிலிருந்து தொகை வழங்கப்படுகிறது. பொதுமக்கள் நிதி 75 சதவீதமும் கோவில் அல்லது பொது நிதிகளின் பங்கு 25 சதவீதமும் இருக்க வேண்டும் என்று கருதப்படுகிறது. பொதுமக்களின் ஈடுபாட்டினை திருப்பணிகளில் ஊக்குவிக்கும் நோக்கில் அரசின் நிதிப்பங்கீடு இருக்க வேண்டும் என்றும் கருதப்படுகிறது.

திருக்கோயில் திருப்பணிகளுக்கு வழங்கப்படும் தொகை விபரம் :

1. பொதுமக்கள் அளிக்கும் நன்கொடை
2. அந்தந்தத் திருக்கோயில்களின் நிதி
3. நிதிவசதி மிகுந்த திருக்கோயில்களிலிருந்து வழங்கப்படும் உபரி நிதி
4. அரசுமான்யம்
5. பொது நல நிதி
6. ஆலய மேம்பாட்டு நிதி
7. திருக்கோயில் திருப்பணி மற்றும் அறப்பணி நிதி
8. கிராமப்புறத் திருக்கோயில் திருப்பணி நிதி

அ) **பொதுமக்கள் அளிக்கும் நன்கொடை :**

சமயப் பற்றுள்ளவர்களாலும், தொழில் அதிபர்களாலும், பொறுப்பாட்சி நிறுவனங்கள் மற்றும் பொதுமக்களும் தாமாக மனமுவந்து அளிக்கப்படும் தொகை, அல்லது பொருட்களை கொண்டு திருப்பணி மேற்கொள்ளுதல்.

ஆ) **உபரிநிதி மிகுந்த திருக்கோயில் களிலிருந்து வழங்கப்படும் நிதி :**

நிதி வசதி குறைந்த, தேவையுள்ள திருக்கோயில்களின் திருப்பணிகளை மேற்கொள்ள இந்து சமயம் மற்றும் அறக்கொடைகள் சட்டப்பிரிவு 36ன் கீழ் ஆணையரின் அனுமதியுடன் வசதிமிகு திருக்கோயில்களிலிருந்து வழங்கப்படும் உபரி நிதி மூலம் திருப்பணி செய்யப்படுகின்றன.

## சித்தர்கள் ஜீவசமாதி கொண்டுள்ள திருத்தலங்கள்



| | | |
|---|---|---|
| 1. | திருமூலர் | - சிதம்பரம் |
| 2. | நந்தி | - காசி |
| 3. | கொங்கணர் | - திருப்பதி |
| 4. | நந்தி தேவர் | - சீர்காழி |
| 5. | தன்வந்திரி | - வைத்தீஸ்வரன்கோயில் |
| 6. | கமலமுனி | - திருவாரூர் |
| 7. | வால்மீகி | - எட்டுக்குடி |
| 8. | சட்டை முனி | - திருவரங்கம் |
| 9. | கருவூர்த்தேவர் | - கருவூர் |
| 10. | போகர் | - பழநி |
| 11. | சுந்தரானந்தர் | - மதுரை |
| 12. | மச்சமுனி | - திருப்பரங்குன்றம் |
| 13. | இராம தேவர் | - அழகர்மலை |
| 14. | கும்பமுனி | - திருவனந்தபுரம் |
| 15. | கோரக்கர் | - ஸ்ரீசைலம் |
| 16. | குதம்பைச் சித்தர் | - திருக்கழுக்குன்றம் |
| 17. | பதஞ்சலி | - இராமேஸ்வரம் |
| 18. | இடைக்காடர் | - திருவண்ணாமலை |

இ) அரசு மான்யம் :

ஒவ்வொரு ஆண்டும் திருக்கோயில்களின் திருப்பணிக்காகவும் பழுது பார்த்தலுக்காகவும் அரசு மான்யமாக இத்துறை வரவு-செலவு திட்ட

மானியக் கோரிக்கை மூலம் அரசு மான்யம் ஒதுக்கீடு செய்யப்படுகிறது.

2003-2004ம் ஆண்டிற்கு ரூ.75 இலட்சம் அரசு மான்யம் விடுவிக்கப்பட்டு 13 திருக்கோயில்களின் திருப்பணிக்கு ரூ. 52.29 இலட்சம் வழங்கப்பட்டுள்ளது.

இதுதவிர இத்துறையின் ஆளுகையின்கீழ் இல்லாத ஆதிதிராவிடர்கள் மற்றும் பிற்பட்டோர் வாழும் பகுதியிலுள்ள திருக்கோயில்களின் திருப்பணிகளை மேற்கொள்ளும் பொருட்டு திருக்கோயில் ஒன்றுக்கு ரூ. 25,000/- வீதம் நிதியுதவி வழங்கப்படுகிறது. இத்திட்டத்தின்படி 50 திருக்கோயில்களின் திருப்பணிக்கு அரசு மான்யம் மூலம் ரூ.12.50 இலட்சம் வழங்கப்பட்டுள்ளது. 2003-2004ம் ஆண்டில் 250 திருக்கோயில்களுக்கு நிதிவழங்க நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டுள்ளது.

தொடரும்...

# யானைகள் முகாமினால் வியக்கத்தக்க பலன்கள்



மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் அவர்களின் உத்திரவுப்படி நடத்தப் பட்ட இந்த முகாமில் குருவாயூரைச் சேர்ந்த மிருக வைத்திய நிபுணர் டாக்டர் பணிக்கர் மற்றும் அவரது குழுவினரும் பங்கு பெற்றனர்.

ஒரு யானைக்கு இரண்டுபேர் வீதம் கவனித்துக் கொண்டனர்.

ஆற்றுநீரில் ஒவ்வொரு யானையும் மூன்று வேளையும் சுகமாகக் குளித்தன.

ஊட்டச்சத்துள்ள தரமான உணவு, தேவையான மருந்து, நல்ல சூழ்நிலை, நல்ல ஓய்வு, இராஜமரியாதை யானைகளுக்குக் கிடைத்தது.

நாகூர்தர்கா, கடையநல்லூர் தர்காவிற்குச் சொந்தமான யானைகளும் வந்திருந்தன.

வியக்கத்தக்க பலன்கள் இந்த முகாமில் கிடைத்தன. லட்சுமி என்ற இளம் யானைக்கு ஒரு கண்ணில் கண்பார்வை குறையாய் இருந்தது. முகாம் முடியும்போது அதற்கு முழுமையான கண்பார்வை கிடைத்து விட்டது.

இராமநாதபுரம் சமஸ்தானத்தைச் சேர்ந்த விஜயலட்சுமி என்ற யானை நோய்வாய்ப்பட்டு எலும்பும் தோலுமாக இருந்தது. முகாம் முடியும்போது அதன் நோய்கள் நீங்கி நல்ல ஆரோக்கியம் அடைந்து விட்டது.

எல்லா யானைகளும் குறைபாடுகள், நோய்நீங்கி ஆரோக்கியம் ஆகிவிட்டன. யானைகளின் எடையும் அதிகரித்துள்ளது.

- ஜி. இராமகிருஷ்ணன், இ.ஆ.ப.
ஆணையாளர்

# திருநீறு தரிப்பதால்

டாக்டர் டி. செல்வராஜ்

உடலுக்கு :

திருநீறு தரிப்பதால் உடலுக்கு ஒரு தெய்வீக அழகு ஏற்படுகின்றது, சிவப் பொலிவு உண்டாகிறது.

உடல் உறுப்புகள் தாம் அறிந்தும், அறியாதும் செய்த பாவங்கள் ஒழிகின்றன.

தலைவலி அறவே வராது.

தோல் தொடர்பான நோய்கள் குணமாகின்றன.

நோய்களுக்கு ஆதாரமான கிருமிகள் அகற்றப்படுகின்றன.

கண்ணேறு (திருஷ்டி) கழிகிறது.

பேய், பிசாசு, பில்லி, சூனியம் முதலியவற்றால் எழும் தீமைகளுக்கு அத்திருநீறு கவசம் ஆகும். உடலில் இயல்பாகவே இருக்கின்ற நாற்றங்கள் போக்கப்படுகின்றன.

உள்ளத்திற்கு :

திருநீறு தரித்தவுடன் உள்ளம் ஓர் இதமான உணர்ச்சியில் மூழ்குகிறது.



# திருநாமம் தரிப்பதால்



நாராயணன் திருவடிகளின் சாயல் உடையது திருநாமம். பக்குவப்பட்ட பற்றற்ற உயிர்களுக்கு இறைவனது திருவடிக் கமலங்களே கமலாலயம்.

நாராயணனின் பன்னிரு திருநாமங்களை உச்சரித்தபடி உடலின் பன்னிரு இடங்களில் புனைகின்ற திருமண் காப்புக்குத் திருநாமம் என்பது காரணப் பெயராம்.

நாமத்தின் நடுவிலுள்ள ஸ்ரீசூரணம் இலட்சுமிகரமான தூள் - இலட்சுமியின் சின்னம். திருமகள் விரும்பி நிலைத்து உறைகின்ற இடம்.

ஸ்ரீ சூரணத்தின் இரு பக்கமுள்ள வெள்ளிய நிறம் பட்டைகள் இரண்டும் நாராயணனின் திருவடிச் சுவடுகளாம்.

நாமம் வைணவப் பக்திக்குச் சான்று.

நாமம் புனைந்தவர் நாராயணனின் அடிமை என்பதை எடுத்துக் காட்டுகிறது.

முகத்திற்கு ஒரு தெய்வீகப் பொலிவைத் தருவது நாமமே.

# விளைகின்ற பயன்கள்

தரிப்பவர் ஒரு சிவனடியார் என்ற ஒரு பெருமித உணர்வைத் தருகிறது. பிறர்தரும் துன்பங்களைத் தணிக்கும் கவசமாகிறது. உள்ளம் குழம்பிக் கலங்காமல் காக்கிறது. உள்ளத்தைத் தெளிவாக்கி வெண்மைத் தூய்மை ஆக்குகிறது. சோர்வு, களைப்பு முதலிய துயர்களை நீக்கி அமைதி தருகிறது. இன்பம் கொடுக்கிறது, மங்கலத்துடன் சுக வாழ்வு நல்குகிறது.

**உயிருக்கு :**

திருநீறு பக்தி உணர்வுகளைப் பெருக்குகிறது.

இருவினைகளை நொறுக்குகிறது.

மும்மலங்களை ஒழிக்கிறது.

இம்மை, மறுமைகளில் பல வளங்கள் நிறைந்த வாழ்வுகளைத் தருகிறது.

நினைவாற்றலை வளர்க்கிறது.

தவம், தருகிறது,

ஞானம் தருகிறது.

புகழ் தருகிறது

முத்தி அருளுகிறது, அல்லது மேலான சிவகதி அளிக்கிறது.

திருநீற்றைப் போல் ஒருவருக்குப் பாதுகாப்பானது வேறு ஒன்றும் இல்லை. ஆகவேதான் அதனைக் "கவசத்திருநீறு" என்று போற்றுகின்றார்கள் அருளாளர்கள்.

"வேறுபல காப்புமிகை என்றுஅவை விரும்பார்
நீறு திரு நெற்றியில் நிறுத்திநிறை வித்தார்"

(திருஞானசம்பந்தர் புராணம்.43)

என்பது பெரிய புராணம்.

"மந்திரமாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தரமாவது நீறு துதிக்கப்படுவது நீறு
தந்திரமாவது நீறு சமயத்தில் உள்ளது நீறு
செந்துவர் வாய்உமை பங்கன்
திருஆலவாயான் திருநீறே"

-திருஞானசம்பந்தர்

# விளைகின்ற பயன்கள்

நாமத்தில் நுட்பமாய் நிறைந்துள்ள மருத்துவக் குணங்களை உடல் ஈர்த்துக் கொள்கிறது. அதனால் நோய்கள் அகலுகின்றன. பிணிகள் தணிகின்றன.

அவை உடலைத் தாக்காமல் தாங்குகின்ற காரணத்தால் நாமம் உடலின் காப்பு.

நாமம் உயிரைப் பற்றிய தீவினைகள் முதலியவற்றை வேரோடு களைகின்றது. அதைப் பக்குவப் படுத்துகின்றது.

நாராயணனின் திருவடிகளில் சரண் அடையத் துடிக்கின்ற உயிருக்கு நாமம் ஒரு காப்பு.

நாமங்களின் வடிவில் உடலெங்கும் இலட்சுமி எழுந்தருளுகின்ற போது, நாராயணனின் திருவடிகள் பதிகின்றபோது உடல் சிலிர்க்கின்றது. உள்ளம் பூரிக்கின்றது.

இத்தகைய சுகானுபவங்களை வைணவ பக்தர் உணரத்தான் முடியும். அவற்றை விளக்கமாகச் சொல்லவும் முடியாது, சொல்லியும் முடியாது.

நாமம் இம்மையில் இன்பம் தரும், மறுமையில் பேரின்பம் தரும், முடிவில் முத்திப் பேரின்பம் தரும்.

வைணவர்கள் போற்றவேண்டிய சமஸ்காரங்கள் ஐந்து. சங்கு, சக்கர இலச்சினைகளை இருதோள்களிலும் பதித்தல் வேண்டும். (தாபம்)

நெற்றியில் திருமண் காப்பிடுதல் வேண்டும். (புண்டரம்)

'தாசன் என்ற பெயரைச் சூடுதல் வேண்டும். (நாமம்)

நாராயணனின் திருமந்திரங்களை ஓதுதல் வேண்டும். (மந்திரம்)

நாராயணனை ஆராதித்தல் வேண்டும். (அருச்சனை)

மேற்குறித்த ஐந்து அங்கங்களையும் நிறைவேற்றுகின்றவரே "வைஷ்ணவர்" ஆவார்.

தேவேந்திரன் சுவர்க்க லோகத்தில் அரியணைமேல் அமர்ந்திருந்தான். தேவமகளிரின் ஆடலைக் கண்டும், இனியபாடலைக் கேட்டும் தன்னை மறந்திருந்தான். அவனுடைய குருவாகிய வியாழ பகவான் அங்கு வந்தார்.

இந்திரன் அவர் வருகையைக் கண்டு எழுந்திராமலும், அவருக்கு வழிபாடு செய்யாமலும் இருந்தான். அதனால் கோபமடைந்த வியாழ பகவான் அங்கிருந்து போய்விட்டார். உடனே தேவேந்திரனின் செல்வம் பொலிவு இழந்து குறைய ஆரம்பித்தது. வியாழ பகவானை வணங்காததால் ஏற்பட்ட துன்பம் இது என்பதை அவன் உணர்ந்தான். அவரைத் தேடத் தொடங்கினான். வியாழ பகவானின் உலகத்திலும், முனிவர்கள் உலகத்திலும் தேடினான். பின் சத்தியலோகத்தை அடைந்தான். அங்கு நான்முகனை வணங்கி, நடந்தவற்றைக் கூறினான். 'உன்னுடைய குருவான வியாழ பகவானைத் தேடிக் காணும்வரை அறிவு ஒழுக்கங்களில் சிறந்த மூன்று தலைகளையுடைய "விச்சுவ உருவன்" என்பவனைக் குருவாகக் கொள்க" என்று பிரமதேவன் பதில் கூறினான். அவ்வாறே தேவேந்திரன் விச்சுவ உருவனைத் தன் குருவாகக் கொண்டான்.

தேவேந்திரனைத் தண்டிக்க வேண்டும் என்ற வஞ்சக எண்ணத்தோடு பிரமதேவன் அவனை அனுப்பி வைத்திருந்தான். அதை உணராத தேவேந்திரன் விச்சுவ உருவனிடம் "ஒரு வேள்வி செய்யவேண்டும்" என்று வேண்டினான். விச்சுவ உருவன் "தேவர்களுக்கு ஆக்கம் பெருகுக" என்று வெளியில் கூறி, உள்ளத்தில் தீய வஞ்சனையுடன் "அவுணர்களுக்கெல்லாம் உய்யும் திறம் உண்டாகுக" என்ற நினைத்து ஒரு வேள்வியைச்

# திருவிளையாடல் புராணம்

## 1. இந்திரன் பழிதீர்த்த படலம்

இரா. அரங்கசாமி



செய்யத் தொடங்கினான்.

விச்சுவ உருவனின் தவறான செய்கையை, அவன் தீய உள்ளத்தை இந்திரன் தன் ஞானதிருஷ்டியால் உணர்ந்தான். தன் வச்சிரப் படையால் விச்சுவ உருவனின் மூன்று தலைகளையும் துண்டித்தான். உடனே தேவேந்திரனை பிரம்ம கொலைப் பாவம் வந்து பற்றியது. இந்திரன் பெருந் துன்பம் அடைந்தான்.

இந்திரனின் கொலைப் பாவத்தைத் தேவர்கள் தீர்க்க எண்ணினர். அப்பாவத்தை மரங்களுக்கும், மண்ணிற்கும், பெண்களுக்கும் பங்கிட்டுக் கொடுத்தனர். மரங்களில் பிசினாகியும், மண்ணில் உவராகியும், பெண்களிடம் பூப்பாகியும், நீரில் நுரையாகியும் இப்பாவம் கழியும் என்றனர். இவ்வாறு பிரித்துக் கொடுத்ததால் இந்திரன் பிரமபாவம் நீங்கி மாணிக்கம் போல ஒளிபெற்று விளங்கினான்.

விச்சுவ உருவனின் தந்தையின் பெயர் துவட்டா. தன் மகன் விச்சுவ உருவனை இந்திரன் கொலை செய்த செய்தியை அறிந்து மிகுந்த துன்பம் அடைந்தான். துவட்டா இந்திரனைப் பழிவாங்க எண்ணினான். உடனே அவன் ஒரு வேள்வியைச் செய்து "விருத்திராசுரன்" என்னும் ஓர் அரக்கனைத் தோற்றுவித்தான். "தேவேந்திரன் உயிரைப் போர்புரிந்து வாங்குக" என்று அவ்விருத்திராசுரனைத் துவட்டா அனுப்பிவைத்தான்.

தேவேந்திரனைத் தேடிவந்து விருத்திராசுரன் போர் புரியத் தொடங்கினான். இருவருக்கும் கடுமையான போர் நடைபெற்றது. விருத்திராசுரனிடம் இந்திரன் தோற்று ஓடினான். பிரமலோகம் சென்றான். பிரமதேவனிடம் நடந்தவற்றைக் கூறினான். உடனே பிரமன் அவனைத் திருமாலிடம் அழைத்துச் சென்றான்.

திருமால் "திருப்பாற்கடலைக் கடையும் பொழுது தேவர்களிடமும், அசுரர்களிடமும் இருந்த ஆயுதங்களை "ததீசி" முனிவரிடம் ஒப்படைத்தோம். அவ்வாயுதங்களை யாரும் வந்து கேட்காததால், தாமே அனைத்தையும் விழுங்கிவிட்டார். அவர் விழுங்கிய ஆயுதங்கள் ஒன்றாகத் திரண்டு அவர் முதுகெலும்பில் பொருந்தியுள்ளன. அதுவே 'வச்சிரப்படை' ஆகும். கருணையே வடிவான ததீசி முனிவரிடம் சென்று நீ அதைக் கேட்டால் அவர் அதை உனக்குத் தருவார். அதைக் கொண்டு விருத்திராசுரனை அழிக்க முடியும். அவரிடம் சென்று அதனைப் பெறுவாயாக" என்று கூறினார்.

தேவேந்திரன் ததீசி முனிவரிடம் சென்று வழிபட்டான். அவன் ததீசி முனிவரிடம் "கொடிய அவுணர்களை அழித்துத் தேவர்களை உய்விக்கத் தகுந்த வலிமை வாய்ந்த பொருள் தங்களிடம் உள்ளது. அதனைப் பெற வந்தேன்" என்று கூறினார். ததீசிமுனிவர் சிவ யோக சமாதியில் நிலைத்து, தேவ விமானத்தில் ஏறி, சிவலோகத்தை அடைந்து அங்கு இனிது வீற்றிருந்தார்.

அவருடைய முதுகுத்தண்டை எடுத்துத் தேவதச்சன் ஒரு புதிய வச்சிரப்படையாகச் செய்து அதைத் தேவேந்திரனிடம் கொடுத்தான். தேவேந்திரன் விருத்திராசுரனை அடைந்து அவனை எதிர்த்துப் போரிட்டான். கடுமையான போர் நடந்தது. இந்திரன் வச்சிராயுதத்தை எடுத்தான். அதை வீசத் தொடங்கும் முன் அஞ்சிய விருத்திராசுரன் கடலில் சென்று மறைந்து கொண்டான். இந்திரனும் கடலில் மூழ்கித் தேடினான். எங்கும் காணவில்லையாகையால் நான்முகனை அடைந்து நடந்த செய்தியைக் கூறினான். இச்செய்தியை அகத்திய முனிவரிடம் கூறுக! என்றான் நான்முகன்.

இந்திரன் அங்கிருந்து புறப்பட்டு அகத்திய முனிவர் வாழும் பொதிய மலையை அடைந்தான். நடந்தவற்றை அகத்தியரிடம் கூறினான். அகத்தியர் அக்கடல் முழுவதையும் உளுந்து

## அழகிற் சிறந்த கோயில்கள்

| | | |
|---|---|---|
| தேரழகு | - | திருவாரூர் |
| வீதி அழகு | - | திரு விடை மருதூர் |
| மதிலழகு | - | திருவிரிஞ்சை |
| விளக்கழகு | - | வேதாரண்யம் |

அளவாகக் குறுக்கி விட்டார். கடலில் உள்ள எல்லாப் பொருள்களும் வெளித்தோன்றின. நீர் வாழ் இனங்கள் யாவும் துன்புற்றன.

விருத்திராசுரன் ஒரு மலையின் உச்சியில் தவம் செய்து கொண்டிருந்தான். கடல்நீரை அகத்தியர் குடித்துவிட்டதால் வெளிப்பட்ட அவ்விருத்திராசுரனை இந்திரன் தன் வச்சிரப்படையால் துண்டித்துத் தலையை அறுத்து வீழ்த்தினான். தேவேந்திரனை மீண்டும் பிரமஹத்திதோஷம் பிடித்துக் கொண்டது. அத்தோஷம் அவனை மிகவும் துன்பப்படுத்தியது. இந்திரன் ஒரு தடாகத்தில் உள்ள தாமரைத் தண்டின் நூலினுள்ளே ஒளிந்துகொண்டான். சுவர்க்கலோகம் தன் பொலிவு குன்றியது.

அப்போது நிலவுலகில் 'நகுடன்' என்ற ஓர் அரசன் 'அஸ்வமேதயாகம்' செய்து வந்தான். தங்களுக்கு அரசன் இல்லாத குறையை அறிந்த தேவர்கள் அந்த 'நகுடனை'த் தங்கள் அரசனாக நியமித்துக் கொண்டார்கள். அந்நகுடன் அரசனானவுடன் இந்திராணியைச் சந்திக்க வேண்டுமென்று விரும்பினான். ஏழு முனிவர்கள் சுமந்து செல்ல விரைந்து பல்லக்கில் சென்று கொண்டிருந்த நகுடன் 'இன்னும் விரைந்து செல்லுங்கள்' என்று முனிவர்களை அதட்டினான். அதனால் கோபமடைந்த அகத்தியமுனிவர் அவனைப் 'பாம்பாகக் கடவாய்' என்று சபித்தார். அந்நகுடன் பாம்பாக மாறினான்.

அதன் பின்னர் தங்களுக்கு அரசன் இல்லாத குறையை எண்ணிய தேவர்கள் வியாழ பகவானைத் துதித்தனர். வியாழ பகவான் தடாகத்தில் மறைந்திருந்த இந்திரனைக் கூவி அழைத்தார். இந்திரன் வெளியே வந்து தன் குருவை வணங்கினான். வியாழ பகவானின் உத்தரவால் கங்கை முதலான தீர்த்தங்களில் நீராடினான். பின்னர் கடம்ப வனத்தின் அருகில் சென்ற போது இந்திரனைப் பிடித்திருந்த பிரமஹத்தி தோஷம் அவனைவிட்டு நீங்கியது.

அளவற்ற மகிழ்ச்சி அடைந்த வியாழ பகவான் இந்திரனை நோக்கி" இங்கே புண்ணிய தலமும் தீர்த்தமும் உள்ளன. அவற்றை அறிய ஆவன செய்க" என்றான். அதை அறிய இந்திரன் நாலாபக்கங்களிலும் தன் தூதரை அனுப்பினான். தேடிவந்த தூதர்கள் திரும்பிவந்து "தெய்வத்தன்மை வாய்ந்த அதிசயம் மிக்க சிவலிங்கம் ஒன்று தீர்த்தக்கரையில் உள்ள கடம்ப மரத்தின் நிழலில் உள்ளது" என்றனர்.

அதனைக் கேட்டு மகிழ்வடைந்த இந்திரன் அங்குச் சென்று அச்சிவலிங்கத்தைத் தன் ஆயிரம் கண்களால் கண்டு மகிழ்ந்து வணங்கினான். பின் தேவதச்சனை அழைத்து ஒரு விமானம் அமைக்குமாறு ஏவினான்; சிவனை வணங்க மலர்களைத் தேடினான். அத்தீர்த்தத்தில் மலர்கள் இல்லாமை கண்டு வருந்தினான். அப்போது இறைவன் அருளால் அங்குப் பொற்றாமரை மலர்கள் மலர்ந்தன. மகிழ்ந்து அத்தீர்த்தத்திற்கு **"பொற்றாமரைத் தீர்த்தம்"** என்று பெயரிட்டான். மலர்களைப் பறித்தான். சிவலிங்கப் பெருமான் சந்நிதியை அடைந்தான்.

கதிரவன் ஒளி அச்சிவலிங்கத்தின் மேல் படுவதைக் கண்டான். தன் வெண்கொற்றக் குடையால் நிழல் செய்ய எண்ணினான். அப்போது விண்ணிலிருந்து ஓர் மாணிக்க விமானம் இறங்கி வந்தது. தேவகணங்களால் உண்டாக்கப்பட்டது அவ்விமானம். அவ்விமானம் எட்டு யானைகளும், முப்பத்திரண்டு சிங்கங்களும், அறுபத்து நான்கு சிவகணங்களும் தாங்கி இருந்தது.

(தொடரும்)

நன்றி: இராமலிங்கர்பணிமன்றம், சென்னை.

## தீபங்கள் பதினாறு

1. தூபம்
2. தீபம்
3. அலங்கார தீபம்
4. நாக தீபம்
5. விருஷப தீபம்
6. புருஷாமிருக தீபம்
7. சூலதீபம்
8. கமட(ஆமை)தீபம்
9. கஜ தீபம்
10. வியாக்ர (புலி) தீபம்
11. சிம்ஹ தீபம்
12. துவஜ (கொடி) தீபம்
13. மயூர(மயில்) தீபம்
14. பூரணகும்ப (ஐந்து தட்டு) தீபம்
15. நட்சத்திர தீபம்
16. மேருதீபம்

# அருள்மிகு முண்டகக்கண்ணி அம்மன் திருக்கோயில்

மயிலாப்பூர், சென்னை - 600 004.



புதிய தங்கரதம் செய்தல் திருப்பணி

சென்னை மாநகரில் மயிலாப்பூரில் மிகவும் பிரசித்தி பெற்றதும், பிரார்த்தனை ஸ்தலமுமானதும் அரு உருவ வழிபாட்டு முறையில் சுயம்புவாக, 1300 ஆண்டுகளுக்கு முன்பு தோன்றியதுமான அருள்மிகு முண்டகக்கண்ணி அம்மனுக்கு பக்தர்களின் வேண்டுகோளுக்கு இணங்க தங்கரதம் செய்ய திட்டமிடப்பட்டுள்ளது

ரூபாய் 40 லட்சம் மதிப்பில் நடைபெறும் தங்கரத திருப்பணியில் பக்தர்கள் பங்கேற்று தாராளமாக நிதி அளித்து அதற்குரிய ரசீது பெற்றுக் கொள்ள வேண்டுமாயும், அருள்மிகு முண்டகக்கண்ணி அம்மன் அருள் பெறவேண்டுமாயும் வேண்டுகிறோம்.

**B. ராஜா, B.Sc., B.L.,**
இணை ஆணையர், சென்னை - 34.

**E.** சுந்தரம், B.A.
தக்கார்

**T.** மோகனசுந்தரம்,
நிர்வாக அதிகாரி

# பூதம், பேய், பிசாசுகள் விரட்டும் திருப்புகழ் ஒரு மந்திரமாலை

-திருப்புகழ் மாமணி மு. அருணகிரி



முருகபக்தர் ஒருவர் ஒருநாள் இரவு ஆள் நடமாட்டம் இல்லாத ஒரு சாலையில் தன்னந்தனியே போய்க் கொண்டு இருந்தார்.

அப்பொழுது அவரைப் பற்றலாம் என எண்ணி ஒரு பேயும் அவரைப் பின் தொடர்ந்து வந்தது.

முருகபக்தர் ஒரு குறிப்பிட்ட இடத்திற்கு வந்த போது அந்தப் பேய் அவரைப் பின் தொடராமல் தூர நின்றது.

பேய் தன்னைப் பின் தொடர வில்லை என எண்ணி முருகபக்தர் அந்த குறிப்பிட்ட இடத்தை விட்டு நகர்ந்ததும், பேயும் அவரைப் பின் தொடர்ந்து அவரைப் பற்ற முற்பட்டது.

முருகபக்தர் உடனே ஓடிப்போய் முன் குறிப்பிட்ட இடத்தில் நிற்க அவரைப் பின் தொடர அஞ்சி அப்பேய் தூர நின்று அவ்விடத்தை அச்சத்துடன் பார்த்தது.

பேயை அச்சப்படவைக்கும் அபூர்வசக்தி அக்குறிப்பிட்ட இடத்தில் இருப்பதை அறிந்து கொண்டார் முருக பக்தர். அவ்விடத்திலிருந்த மண்ணை அப்படியே வாரித்தன் மடியில் கட்டிக்கொண்டவராய் முருகபக்தர் நடைபோட, அவரைப் பின்தொடராமல் பேய் பின்வாங்கிச் சென்று விட்டது.

பத்திரமாய் வீடு வந்து சேர்ந்த முருகபக்தர் மடியிலிருந்த மணலைக் கீழே கொட்டி ஆய்வுசெய்த போது அதில் இருந்தது அருணகிரிநாதரின் திருப்புகழ்ப்பாடல் இருந்த ஒரு பனை ஓலை.

**"இருந்த வீடும் கொஞ்சிய சிறுவரும் உறு கேளும்**

**இசைந்த வூரும் பெண்டிரும் இளமையும் - வளமேவும்"**

எனத் தொடங்கும் திருப்புகழ் பாடல் அடங்கிய பனை ஓலையே அன்று முருகபக்தருக்குக் கிடைத்த ஓலையாகும்.

இவ்வாறு திருப்புகழ்ப் பாடலுக்கே அஞ்சிப் பின் தொடர்ந்த பேய் ஓடிவிட்டது என்று சொன்னால், அருணகிரிநாதர் அருளிச் செய்த திருப்புகழ் மந்திரமாலை முழுவதும் நம் இல்லத்தில் இருப்பின் பூதம், பேய், பிசாசுகள் வந்து அண்டுமா? அவை ஓடி ஒளிந்தும் ஒழிந்தும் விடும் என்பது திண்ணமாகும்.

ஆகவேதான் "திருப்புகழ்" விரிவுரை எழுதிய அருள்மொழி அரசு டாக்டர் திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் இவ்வாறு உபதேசித்தார்கள்.

**"அடுப்படி இல்லாத வீடு இருந்தாலும்
இருக்கலாம்
திருப்புகழ் இல்லாத வீடு இருக்கக்
கூடாது"**



# மகாபாரதம்

## 3

முனைவர் **த.அமிர்தலிங்கம்**

பாரதத்தில் விதுரர் சிறந்த நீதிமானாகவும், சிறந்த வில்வீரராகவும் போற்றி உரைக்கப்படுகிறார். **"நீதி புனை விதுரன்" "வில் விதுரன்"** எனவே அவரைக்குறிப்பிடும் இடங்களில் எல்லாம் அடைமொழி கொடுத்துப் போற்றி உரைத்திருப்பதைப் பாரதம் முழுவதும் காண முடியும்.

துரியோதனன் அவருடைய பிறப்பை இழித்துக்கூறும் அளவிற்கு அவர் இழி பிறப்பாளரா? எனில் இல்லை இல்லை என்றே சொல்லுதல் வேண்டும்.

**"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா செய்தொழில் வேற்றுமையான்"** என்ற வள்ளுவர் வாய்மொழியே எக்காலத்திற்கும் பொருந்தும் பொன்மொழி என்பதை நன்மனத்தோர் ஒப்புவர்.

வியாச முனிவருக்கும் அம்பிகைக்கும் பிறந்தவர் துரியோதனனின் தந்தையாராகிய திருதராட்டிரர். வியாச முனிவருக்கும் அம்பாலிகைக்கும் பிறந்தவர் பாண்டவர்களின் தந்தையாராகிய பாண்டு. வியாசமுனிவருக்கும் அம்பிகையின்



பணிப்பெண்ணிற்கும் பிறந்தவரே விதுரர்.

விதுரரின் மேன்மையை வியாசமுனிவரே

"அம்பிகைக்கொடி தோழியை விடுத்தனள்
அவள்புரி தவந்தன்னால்
உம்பரிற்பெறு வரத்தினால் தருமன் வந்து
உதித்திடும்பதம் பெற்றான்
வெம்படைத் தொழில் விதுரன் என்றவன் பெயர்"
(சம்பவச் சருக்கம். 20)

எனக் கூறியிருப்பதைக் காணலாம்.

அறக்கடவுளாகிய எமனே விதுரராகப் பிறந்தார் என்பது வியாசர் வாக்கு. அவருடைய அத்தகைய சிறப்பினைப் போற்றித்தான், வீடுமரும் விதுரரையே அமைச்சராக்கி அவனி ஆள வைத்துள்ளார். அத்தகைய நீதிமானை நீசன் துரியோதனன் பழித்துரைத்ததும் அவன் வினையே அல்லாமல் வேறில்லை.

விற்களிலே சிவனுடைய வில் ஒன்று, விஷ்ணுவினுடைய வில் ஒன்று, ஆக இரண்டு விற்களே மேன்மையான விற்கள் என்று காவியங்களில் பேசப்பட்டுள்ளன. சிவபெருமானுடைய வில்லை முறித்தே இராமன் சீதையை மணங்கொண்டான் என்பது இராமாயணத்தால் அறியலாகும் செய்தி.

மற்றொரு வில்லாகிய விஷ்ணுவின் வில், பரசுராமனிடம் இருந்து, பின்பு இராமபிரானிடம் வந்துற்றது. இராமபிரானிடம் இருந்த அவ்விஷ்ணுவில்லே விதுரனிடம் வந்து விளங்கியது என்பதைப் பாரதத்தால் அறிகிறோம்.

அவ்விஷ்ணு வில்லைக் கொண்டே நிகரற்ற வில்வீரராக விளங்கினார் விதுரர்.

அவர் போர்க்களத்திலே எதிர்நிற்பாரேயானால், அர்ச்சுனனும் அவரை வெல்ல முடியாது. திருமாலின் அம்சமாகிய கண்ணபெருமானும்கூட வெல்லுதல்

## சிரஞ்சீவிகள் ஏழு பேர்

1. அசுவத்தாமா
2. மகாபலி
3. வியாசர்
4. அனுமார்
5. வீபீஷணர்
6. கிருபர்
7. பரசுராமர்.




அரிதேயாகும். ஆகவே நடைபெறும் பாரதப் போரில் பாண்டவர் வெல்லவேண்டுமானால், விதுரரின் கையில் இருந்த விஷ்ணு வில் முதலில் அழிந்தாக வேண்டும்.

பாண்டவரின் தூதராக வந்த கண்ணன், விதுரரின் வில்லை அழிக்க செய்த தந்திரம் தான், விதுரரும் எதிர்பாராமல் அவர் வீட்டிற்கு விருந்தாகச் சென்றது. அதனால் துரியோதனனுக்குக் கோபம் வந்து 'தாசி மகன்' என விதுரரைப் பழிக்க விதுரரும் **'வில்லிரண்டினும் உயர்ந்த வில்லதனை வேறிரண்டு பட வெட்டினார்"** என்பதை மேலே கண்ணுற்றோம்.

வீடுமரும், விதுரரின் வில்லின் சிறப்பை **"காரனைத்தும் விடு தாரையன்ன பலகணைகள் ஏவி அமர்கருதும் வில்"** என்று கூறி **"வீரனைப் பழுதுரைத்த நீ பகையை எங்ஙனே தனிகொல் வெல்லுவாய்"** என துரியோதனனைக் கண்டிப்பதைக் காணுகின்றோம்.

துரியோதனன் அவையில் இருக்கும் அரசர் பலரும் "விஷ்ணு வில் முறிந்து போனதே! விசயன் போருக்கு வருவானேயானால், எந்த வில்லி எதிர் நிற்கும்?" என்று வருந்தி உரைப்பதையும்காணுகின்றோம்.

"அப்படிப்பட்ட சிறந்த வில்லை ஏன் முறித்தீர்" எனக் கண்ணபெருமானும் தெரிந்தும்

தெரியாதவரைப்போல் விதுரரை

"இருசிலையுண்டென்றறிந்த இருநிலத்
தியம்பும் வில்லின்
ஒரு சிலை முறித்த சீற்றமென் கொலோ?"

(கிருட்டிணன் தூது 141)

என வினவுவதைக் காணுகின்றோம்.

"உரைத்த புன்சொல் எனக்கிசையாமல் யானும் இருஞ்சிலை இறுத்தேன்" என்று விதுரர் விடை கூறுகிறார். உடனே வில் முறிந்தது குறித்து கண்ணபெருமானுக்கு உண்மையில் வருத்தம் இருக்குமானால் தம் வருத்தத்தை அல்லவா விதுரரிடம் தெரிவித்திருக்க வேண்டும். அவர் மன மகிழ்ச்சியே கொள்கின்றார்.

"மாயனும் மகிழ்ந்து



நோக்கி
மாசுணமுயர்த்த மன்னன்
போயருஞ்சேனையோடு போர்க்
களங் குறுகும்போது
நீயவனருகு நில்லா தொழியின்
நின்நேய மைந்தர்
தாயமுஞ் செல்வமுற்றுந் தரணியும்
பெறுவர் அன்றே"

(கிருட்டிணன் தூது. 145)

என்ற பாடலை நன்கு படித்துப் பாருங்கள். 'மாயன்' என்கிறார் கண்ணனை வில்லிப்புத்தூராழ்வார். தம்மை 'ஆயன்' என்று பழித்த துரியோதனனை மாய்க்கவே 'மாயன்' தந்திரமாய் தூது என்ற பெயரில் அத்தினாபுரி வந்து விதுரர் வீட்டில் விருந்தாகத் தங்கி, வில்லொடிக்கச் செய்தார் என்பது இப்பாடலால் தெளிவாகும். மேலும் கண்ணபெருமான் சொல்லுகிறார்.

"ஏற்றிய நறுநெய் வீசி
இந்தனம் அடுக்கினாலும்
காற்றுவந் துறாதபோது
கடுங்கனல் கதுவலுண்டோ?
நீற்றணி நிமலன் அன்ன நின்கை
வில்இற்ற தாயிற்
சீற்றவேல் அரசன்சேனை
தென்புலம்படர்கை திண்ணம்"

(கிருட்டிணன் தூது. 164)

'விறகுகளை அடுக்கி, நெய்யை ஊற்றி எரிய வைத்தபோதும், காற்று சாதகமாக வீச வில்லையானால், மிகுந்த நெருப்பு பற்றாமல் போய்விடும். விபூதியைத் தரித்த குற்றமற்ற சிவபெருமானை ஒத்தவிதுரரே! உம் கையில் இருந்த வில்லை நீர் ஒடித்தது பாண்டவர் பக்கமாய் வெற்றிக்காற்றினை வீச வைத்திருக்கிறது. இனி துரியோதனன் படைகள் யமலோகம் செல்வது உறுதி' என்பதாகக் கண்ண பெருமான் தம் எண்ணத்தைத் தெளிவுபடுத்தியிருப்பதால், பாரத அமரில் யாவரையும் நீறாக்கிப் பூபாரம் தீர்க்கவே புயல்வண்ணன் சூழ்ச்சிகள் புரிகிறான் என்பதை உணரலாம்.

வில்லை ஒடித்த அச்சூழ்ச்சியுடன் கண்ணனின் மாயை நின்று விடவில்லை. "துரியோதனன் மொழிந்த வெல்லாம் பொறுத்துக்கொள்" என்பதாக விதுரரைத் தேற்றித் தாம் வந்த வேலையை மேலும் தொடரக் கண்ணபெருமான் கர்ணனை பயந்த காதற்கன்னிதன் கோயில் புகுந்தாராம். கர்ணனைப் பயந்த காதற்கன்னி யார் என்பது கர்ணனுக்கே தெரியாத ஒன்று.

கர்ணனுக்கு மட்டுமல்ல. கண்ணபெருமான் ஒருவருக்கு அன்றி மற்ற எவருக்குமே தெரியாத மாபெரும் இரகசியமே அது. துரியோதனனுக்கு உற்ற நண்பனாகவும், பஞ்ச பாண்டவர்களுக்குக் கொடிய பகைவனாகவும் விளங்கும் கர்ணனைப்

பெற்றவள் யார் என்பதைத் தெரிந்துகொள்ளும்போது அது நமக்கே விந்தையாகத்தான் விளங்குகிறது.

எந்தப் பஞ்சபாண்டவர்களை வெல்வேன் என்று கர்ணன் உறுதிபூண்டு விளங்குகின்றானோ, எந்தப்பஞ்ச பாண்டவர்களில் ஒருவனாகிய அர்ச்சுனனைத் தன் கொடிய நாகாத்திரக்கணையால் கொல்வேன் என்று கர்ணன் வஞ்சினம் பூண்டு விளங்குகின்றானோ, அந்த அர்ச்சுனன் உள்ளிட்ட பஞ்சபாண்டவர்களை ஈன்ற குந்திதேவியே, கர்ணனைப் பயந்த தாய் என்பது கண்ணபெருமானால், குந்திதேவியிடம் அறிவிக்கப்படும்போது, அச்செய்தி குந்தியே ஆச்சரியப்படத் தக்க செய்தியாகத்தான் இருக்கிறது! அந்த விவரங்களை இனி விரிவாகக் காண்போம்.

பஞ்சபாண்டவர்கள் வனவாசத்தில் வாடிய அந்தப் பதின்மூன்று ஆண்டுக்காலமும் குந்தி அத்தினாபுரியில் தனக்கென திருதராட்டிரர் ஒதுக்கியிருந்த ஓர் அரண்மனையில் தங்கியிருந்தாள். தம் அன்பிற்குரிய மக்கள் ஐவரையும் மருமகளையும் குந்திதேவியும் பதின்மூன்றாண்டுக்காலம் காணப்பெற்றாள் இல்லை.

கண்ணபெருமான் தம் மனைக்கு எழுந்தருளக் கண்ட குந்தி, தம் மக்களையே நேரில் கண்டாற் போன்ற பெருமகிழ்வு கொள்கின்றாள். **"கானுறு மைந்தர் தம்மைக் கண்டனள் போன்றாளாகி"** களிப்புறும் குந்திதேவி "யானுறை இல்லின் வந்தது என்ன மாதவம்?" என்று கண்ணபெருமானை ஏத்தி, அதன்பின் கண்ணபெருமான் அத்தினாபுரிக்கு வந்துற்ற காரணத்தையும் வினவுகின்றாள்.

அதற்குக் கண்ணபெருமான்

**"நின்பெரும் புதல்வர் சொல்ல நெடும்புனல் நாடுவேண்டி**
**வன்புடை யரசர்கோமான் மனக்கருத்தறிய வந்தேன்**
**தென்புலவேந்தன்வெஃகச்செருத்தொழில் புரிவன் என்றான்"**

*(கிருட்டிணன் தூது. 150)*

என்று பாண்டவர்களுக்காக தூது வந்ததையும், துரியோதனன் நாடுதர மறுத்துப் போரே புரிவேன் என முடிவுசெய்திருப்பதையும் எடுத்துக் கூறுகின்றார்.

போர் நடப்பது உறுதியாகிவிட்டதை அறிந்த அந்தத்தாயின் மனம், போரில் வெல்பவர் யாரோ? விதியினால் சாபவர் யாரோ? என்று எண்ணிக்கலங்குகிறது. அப்போதுதான் கர்ணனும் குந்தி பெற்ற பிள்ளை என்ற இரகசியத்தை கண்ணபெருமான் குந்திக்கு எடுத்துரைத்து அவளை அதிசயிக்கவும், அதிர்ச்சியடையவும் செய்கிறார்.

கோபத்திற்கும் சாபத்திற்கும் பேர்போன துர்வாச மாமுனிவர் குந்திபோஜராஜனின் அரண்மனைக்கு எழுந்தருளியிருந்த காலத்தில், மன்னன் தன் மகளான குந்தியை முனிவர்க்குப் பணிவிடை செய்யுமாறு பணியில் அமர்த்தியிருந்தான். குந்தியும் அவ்வாறே ஓராண்டுக்காலம் துர்வாச முனிவருக்கு எல்லாப் பணிவிடைகளையும் சிறப்பாக நிறைவேற்றி, முனிவரின் மதிப்பிற்கு ஆளானாள்.

அதனால் பெருமகிழ்ச்சியுற்ற துர்வாசமாமுனிவர் தேவர்களை வரவழைக்கவல்ல ஐந்து மந்திரங்களைக் குந்திக்கு உபதேசித்தருளி, இம் மந்திரங்களைச் சொல்லி தியானித்தால் அந்தந்த மந்திரங்களுக்குரிய தேவர்கள் வந்து அவளுக்கு அவர்களின் அம்சமாக விளங்கும் புத்திரர்களைத் தருவர் எனக் கூறி, வாழ்த்திச் செல்கின்றார்.

முனிவர் சென்றபிறகு, குந்தி அம்மந்திரங்களைச் சோதித்துப் பார்க்க விரும்பி சூரியனுக்குரிய மந்திரத்தைச் சொல்லி தியானித்தாள். உடனே சூரிய பகவானும் அம்மந்திரவல்லமையால் குந்தியின் முன் தோன்றித் துருவாசர் கூறியவாறே தம் அம்சமாக ஒரு குழந்தையையும் உண்டாக்கிக் குந்திதேவியிடம் கொடுத்து, மறைந்துபோனார்.

அதற்குப் பிறகு தான் குந்தி, தனக்கு இன்னும் திருமணமே ஆகாத நிலையில், இப்படியொரு குழந்தைக்குத்தான் அறியாமையால் தாயாக நேர்த்ததை எண்ணி, இவ்வுண்மை மற்றவர் அறியநேரின் பழிவந்து சேருமே என மனம் பதைத்து, வேறு வழியின்றி ஒரு மரப்பேழையில் குழந்தையை வைத்து யமுனை

## பள்ளி கொண்ட அம்மன்

பள்ளி கொண்ட அம்மனைத் தரிசிக்க, பொள்ளாச்சி அருகே உள்ள ஆனைமலைக்குச் செல்ல வேண்டும்.

இந்த அம்மனின் பெயர் "மாசானி அம்மன்" 30 அடி நீளத்தில் சயனக் கோலத்தில் அருள்தருகிறார்

சக்தி வாய்ந்த இந்த அம்மனை வேண்டிக் கொண்டால் வேண்டியது எல்லாம் நடக்கும்.

ஆற்றில் விட்டுவிட, யமுனையாறும் அக்குழந்தையைக் கங்கையாற்றில் கொண்டுபோய் சேர்த்தது.

கங்கையாற்றில் மிதந்து வந்த மரப் பேழையைத் திருதராட்டிர மன்னனின் தேரோட்டியாகிய அதிரதன் காணப்பெற்றுக் குழந்தையைக் கண்டெடுத்துத் தனக்குப் பிள்ளை இல்லாததால் தானே மகிழ்ந்து அதனை வளர்க்க ஆசை கொண்டு வாரி எடுக்குங்கால் கர்ணகுண்டலங்களுடன் பிறந்த இக்குழந்தையைக் "கர்ணன்" என அழைக்குமாறு சூரியனும் அசரீரியாக ஆகாயத்தில் நின்று ஆணையிட, கர்ணனும் தேரோட்டியின் மகனாக வளர்ந்தான் என்ற விவரங்களையெல்லாம் முக்காலமும் அறிந்திருப்பவராகிய கண்ணபெருமான், குந்திதேவிக்கு எடுத்துரைத்தருளுகின்றார்.

"கதிரவன் அருளினாலோர் கணத்திடை
காதல் கூர
மதலையங் கொருவன் தன்னைப் பயந்த
பின் வடுவென்றஞ்சி
பிதவையம் பேழைதன்னிற் பொதிந்து நீ
விட அப்போது அந்
நதியும் மகவைக் கங்கைநதியிடைப்
படுத்ததன்றே"

(கிருட்டிணன் தூது 153)

"காதல்நின் புதல்வன் தன்னைக் கண்ணிலா
அரசன் பொற்றேர்ச்
சூதன்வந் தெடுத்துக்கொண்டு சுதனென
வளர்க்குங்காலை
ஆதபன் இவனை யாருங் கன்னன் என்று
அழைக்கவென்றான்
தாதையும் விசும்பிற் சொன்ன நாமமே
தக்கதென்றான்"

(கிருட்டிணன் தூது 154)

இவ்வாறாகக் கர்ணன் குந்திதேவியின் தலைப்பிள்ளையாவதை எடுத்துரைக்கும் கண்ணபெருமான் அம் மூத்தபிள்ளை கர்ணன், துரியோதனனின் அன்புக்குப் பாத்திரமாகி அங்க நாட்டு மன்னனாக விளங்குவதையும், அர்ச்சுனனைப் பாரதப்போரில் கொன்றே தீருவது எனக் கங்கணம் கட்டிக் கொண்டிருப்பதையும் தெரிவித்து, அதன்பிறகு தாம் குந்தியைத் தேடி வந்த காரணம் என்னவென்பதையும் விவரிக்கிறார்.

பாண்டவர்களுக்கு வெற்றித்தேடி தருவதொன்றே கண்ணபெருமானின் இலட்சியம். அந்த இலட்சியம் நிறைவேற தடையாயிருந்த விதுரரின் வில்லை அவர் வீட்டில் விருந்தாளியாகத் தங்கியதன்மூலம் ஒடிக்கச் செய்து வெற்றி கண்ட கண்ணபெருமான் இத்தனைக்காலம் குந்தியின் பிள்ளை கர்ணன் என்பதைத் தெரிவிக்காமல் இருந்து இப்போது தெரிவிப்பதன் மூலம், பாண்டவர்களின் வெற்றிக்குப் பாடுபடுகிறார். அதனால் தான் குந்தியிடம்" நின் மகன் கர்ணனை, பாண்டவர்கள் பக்கம் வருமாறு நீ போய் விரைவில் கூறிக்கூட்டுவிக்கவேண்டும். அதனால் கர்ணனுக்கு உண்டாகப்போகும் நன்மைகளையும் அவனுக்கு நீ எடுத்துரைக்கவேண்டும்" என்பதாகக் கண்ணபெருமான், குந்திதேவியிடம் அறிவிக்கிறார்.

(தொடரும்)

## மனைவியருடன் நவக்கிரகங்கள்

கோவை கோனியம்மன் கோயிலில் நவக்கிரகங்கள் தங்கள் மனைவியை மடியில் அமர வைத்திருக்கிறார்கள். நடுவே சூரியன் இருக்க வட்ட வடிவில் மற்ற எட்டு பேரும் இருக்கிறார்கள்.



## சூரசம்ஹாரம் நடைபெறாத முருகன் திருக்கோயில்

முருகப்பெருமானின் திருக்கோயில்கள் அனைத்திலும் சூரசம்ஹாரம் நடைபெறும். ஆனால் திருத்தணியில் மட்டும் சூரசம்ஹாரம் நடைபெறுவதில்லை. காரணம் முருகன் சினம் தணிந்து அமர்ந்த இடம் செருத்தணி - திருத்தணி ஆகும்.

# ஆனந்த பவன் ஏ/சி குரூப்

உயர்தர சைவ உணவகம், கடலூர்.

உங்கள் ஆதரவின் அரவணைப்பில் ...

நல்லெண்ணத்தின் நட்பின் பிணைப்பில் ...

வளர்ந்து வளர்ந்து

வெள்ளி விழா நோக்கிச் செல்லும் நிறுவனம் ...

உங்கள் வருகையும், வாழ்த்து மலர்களின் வாசமும்
எங்களின் வளர்ச்சிக்கு வழிகாட்டட்டும்.
நம் அன்பான நல்லுறவு
காலமெல்லாம் நிலைக்கட்டும்.

## ஆனந்த பவன் ஏ/சி குரூப்

உயர்தர சைவ உணவகம், கடலூர்.



*83* லாரன்ஸ்ரோடு மற்றும்
*87* லாரன்ஸ் ரோடு
பஸ்நிலையம் எதிரில்
கடலூர்

*9 KALC* கேம்பஸ்
மஞ்சக் குப்பம்
கடலூர்



**வி**ழுப்புரம் - பாண்டிச்சேரி செல்லும் சாலையில் கண்டமங்கலம் அருகில் 2 கி.மீ. தொலைவில் உள்ளது சின்னபாபு சமுத்திரம் என்னும் கிராமம்.

அருள்ஒளி வீசும் அற்புதச் சித்தர் சிவத்திரு படே சாயபுவின் ஜீவசமாதியுடன் கூடிய திருக்கோயில் இங்குப் புகழ்பெற்று விளங்குகின்றது.

"ஒன்றேகுலம் ஒருவனே தேவன்" எனும் மத ஒருமைப் பாட்டிற்கு எடுத்துக் காட்டாக இவ்வூரில் மகான் படே சாயபு வாழ்ந்துள்ளார்கள்.

சந்தனமும் வழங்கப்பட்டு வருகின்றது. மயிலிறகு கொண்டு மந்திரித்து சர்வசமய ஆகமமுறைப்படி பூஜைகள் நடந்து வருகின்றது.

சிவத்திரு படே சாயபுவின் குருபூஜை நாளில் (மாசிமாதம் ஆயில்ய நட்சத்திரம்) பல்லாயிரக் கணககான பக்தர்கள் கலந்து கொண்டு அவருடைய ஜீவசமாதியை வழிபட்டு வருகிறார்கள்.

ஜீவசமாதியின் அருகில் அமைந்துள்ள திரௌபதி அம்மன் கோவிலில் நெருப்பு மிதி விழா ஆண்டுதோறும் சித்திரை மாதத்தில் நடைபெற்று வருகிறது. இவ்விழாவில் மகான்

**சைவரும், வைணவரும் இசுலாமியரும் வணங்கும்,**
**அணில் தீக்குண்டம் இறங்கும் அற்புதத் திருத்தலம்**
**தொழுநோய், காசநோய் புற்றுநோய் குணமாகும்**
**அதிசயத் திருத்தலம்**

தம் கருணைப் பார்வையால் உற்றுநோக்கி, நோயாளிகளுக்கு விபூதி கொடுத்தே நோய்களைப் பறந்தோடச் செய்துள்ளார்.

இவர் வாழ்ந்திருந்த காலத்தில் ஒரு நாள் விளையாடிக் கொண்டிருந்த சிறுவர்களை அழைத்து ஒரு பெரிய குழியைச் செய்துள்ளார். அதில் தாம் இறங்கி அமர்ந்து கொண்டு, குழந்தைகளை மண் கொண்டு குழியை மூடச் செய்துள்ளார்.

நெடுநேரமாகியது, குழியில் இறங்கிய சிவத்திரு படேசாயபுவின் குரல் ஒன்றும் கேட்கவில்லை.

குழந்தைகள் "சுவாமி! சுவாமி! எனக் கதறி அழுதனர். அப்போது குழியிலிருந்து சிவத்திரு படேசாயபு அவர்களின் கரம் மட்டும் வெளிவர, அவர் கையில் பலபல வண்ணங்களில் மிட்டாய்கள் இருந்தன.

குழந்தைகள் மிட்டாய்களை எடுத்துக்கொண்டு மகிழ்ச்சியாக ஓடி ஊர் மக்களுக்கு இந்த அற்புத நிகழ்ச்சியைத் தெரிவித்தார்கள். மக்களும் படேசாயபு அவர்களின் ஜீவ சமாதியின்மேல் கோயில் கட்டி வழிபட்டு வருகிறார்கள்.

இத்திருக்கோயிலில் சிவமுறைப்படி விபூதியும், விஷ்ணு முறைப்படி துளசிதீர்த்தமும், முஸ்லீம் முறைப்படி

படே சாயபுவின் உத்தரவுபெற்று முதலில் நெருப்புக்குழியில் அணில் ஒன்று இறங்கும் அதிசயம் இன்று வரை நடைபெற்று வருகிறது. அதன்பிறகு ஆயிரக்கணக்கில் பக்தர்கள் குண்டத்தில் இறங்குகின்றனர்.

படேசாயபுவின் ஜீவசமாதியை செவ்வாய், வியாழன், ஞாயிற்றுக்கிழமைகளில் ஆயிரக் கணக்கான பக்தர்கள் தரிசித்து அன்னதானம் செய்ய, தீரா நோயெல்லாம் தீர்ந்துவரும் அற்புதமும் நடைபெற்று



வருகின்றது, கேன்சர், தொழுநோய், காசநோய் போன்ற கடுமையான நோய்களையும் தீர்த்துவைக்கின்றார் சிவத்திரு படே சாயபு சுவாமிகள்.

க ரூர் மாவட்டத்தில் காவிரி ஆற்றின் கரையில், குளித்தலை அருகே அய்யர்மலை என அழைக்கப்படும் சிறப்பு வாய்ந்த திருக்கோயில் அமைந்துள்ளது. குளித்தலையில் இருந்து மணப்பாறை செல்லும் சாலையில் சுமார் 8 கி. மீ தொலைவில் இத்தலம் அமைந்துள்ளது. மலையின் மீது அமைந்துள்ள இக்கோயில் அய்யர்மலை, சிவாயமலை, இரத்தினகிரி, மணிகிரி, மாணிக்கமலை என்றெல்லாம் அழைக்கப்படுகிறது. யாவருக்கும் மேலாகிய தலைவனாகிய இறைவன் கோயில் கொண்டு விளங்குவதால் 'அய்யர் மலை' எனப் போற்றி அழைக்கப்படுகிறது.

திருநாவுக்கரசர் பெருமான் இத்தலத்தை 'ஆடல் பாடல் உகந்த வாட்போக்கி' எனப் போற்றிப் பாடுகின்றார். காவிரி ஆற்றின் தென் கரைத் தலங்களில் பாடல் பெற்ற முதல் திருத்தலம் என்ற பெருமை பெற்ற தலமாக இத்தலம் விளங்குகிறது. மலைப்படிகளின் அமைப்பும் 'ஓம்' என்னும் பிரணவ வடிவில் திருச்சுற்றும் அமைந்திருப்பதால் 'சிவாய மலை' என்றும் அழைக்கப்படுகிறது. 1178 அடி உயரமுள்ள இம்மலையில் கோயிலுக்குச் செல்ல 1017 படிகள் அமைந்துள்ளன.

மலைக்கு செல்லும்முன் அடிவாரத்தில் சிவாயதீர்த்தம் எனவும், பஞ்சாட்சர தீர்த்தம் எனப்படும் திருக்குளமும், தேர் ஓடும் வீதியும் அமைந்துள்ளது. அடிவாரத்தில் முகப்பில் நூற்றுக்கால் மண்டபம் உள்ளது. இம்மண்டபத்தில் விநாயகர், சக்திவாய்ந்த வைரப் பெருமாள், கருப்பண்ணசாமி, கோடங்கி நாயக்கன், தண்டபாணி ஆகியோர் சன்னதிகள் உள்ளன. இங்கு வழிபட்டு மேலே செல்கிறோம்.

கோயிலுக்கு செல்லும் பாதையில் 21 மண்டபங்கள் உள்ளன. எனவே ஆங்காங்கே இளைப்பாறி, சுற்றுப்புற இயற்கை அழகினைக் கண்டு ரசித்துக் கொண்டே செல்லலாம்.

படிக்கட்டு துவங்கும் இடத்தில் சகுனக்குன்று என்ற உருண்டையான பெரிய பாறை உள்ளது. நினைத்த காரியம் முடியுமா என்பதைத் தெரிந்து கொள்ள இப்பாறையின் அருகில் அமர்ந்திருக்கும் பொழுது பல்லி இடும் சப்தம் கேட்டால் நினைத்த காரியம் நின்றவேறும் என்ற நம்பிக்கையுடன் இங்கு வழிபட்டு செல்கின்றனர். இதற்கு அருகில் உள்ள மண்டபத்தில் கம்பத்தடியில் தம் தீவினை அகல கயிறு கட்டி வழிபடுகின்றனர். இதற்கும் சற்று மேலே பொன்னிடும் பாறை உள்ளது. இதனை அடுத்து சிறப்ப வேலைப்பாட்டுடன் காணப்படும்

# வாட்டம் போக்கும் வாட்போக்கி மலை

## (அய்யர்மலை இரத்தினகிரீசுவரர் கோயில்)

கி. ஸ்ரீதரன், பதிவு அலுவலர், தொல்லியல் துறை, சென்னை 600 113



18 படிகள் உள்ளன. இங்கு யாரும் பொய் சத்தியம் செய்ய மாட்டார்கள் என்றும், மிகவும் சக்தி வாய்ந்த இடம் என்றும் கூறுகின்றனர். தங்களுக்குள் ஏற்படும் வழக்குகளையும் மக்கள் இங்கே பேசி முடித்துக் கொள்வதாகவும் கூறுகின்றனர்.

தொடர்ந்து இலட்சத்தீப மண்டபம், ஏகாலியர் மண்டபம், காக்கை மண்டபம், வசந்த மண்டபம் ஆகிய மண்டபங்கள் உள்ளன. கோயிலுக்குச் செல்லும் வழியில் 'கன்னிமார் பாறை' என அழைக்கப்படும் செங்குத்தான பாறைகள் உள்ளன. பாறை நடுவே சப்த கன்னியர் - காளி, விநாயகர் ஆகியோர் சிறப்பாக வழிபடப் பெறுகின்றனர்.

இதனை அடுத்து உகந்தான்படி விநாயகர் சன்னதி உள்ளது.

மலை உச்சிக்கு வந்து விட்டோம்! உகந்தான் படி விநாயகரை வழிபடுவோம். அடுத்து முதலில் காண்பது சோழ புரீசுவரர் சன்னதி. அதற்கு பின்னால் கிழக்கு நோக்கிய சன்னிதியில் அம்மன் சுரும்பார்குழலி (வண்டு மொய்க்கும் கூந்தலை உடையவள்) என்ற பெயருடன் அன்பர்களுக்கு அருள் பாலிக்கின்றாள். அப்பர் பெருமான் தமது திருத்தாண்டகத்தில் 'சுரும்பமருங் குழலாள்' எனப் பெயரிட்டுப் போற்றுகின்றார். தலவிருட்சமான வேம்பு இங்கே உள்ளது.

### இராஜலிங்கர்

அம்மனை வழிபட்டு மேலே இறைவன் சன்னதிக்குச் செல்கிறோம். இறைவன் சுயம்பு மூர்த்தியாக மேற்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

இறைவன் இரத்தினகிரி நாதர், வாட்போக்கி நாதர், இராஜலிங்கர், முடித்தழும்பர், மணிக் கொழுந்தீசர் என்றெல்லாம் பல பெயர்களில் அழைக்கப்படுகிறார். சன்னதிக்குள் நுழையும் இடத்தில் வைரப்பெருமாள் எழுந்தருளியுள்ளார். சக்தி வாய்ந்த இவரை மக்கள் சிறப்பாக வழிபட்டு நலமடைகின்றனர்.

சித்திரை மாதத்தில் பௌர்ணமி நாள் அன்று சூரிய ஒளி சுவாமி மீது பட்டு சூரிய வழிபாடு நடைபெறும் அற்புதக்காட்சியைக் கண்டு வழிபடலாம்.

### புராண வரலாறு

ஆரிய தேசத்து மன்னன் ஒருவன் மாணிக்கம் கிடைக்க வேண்டி இறைவனின் அபிடேகத்திற்காக நீரைக் கொண்டு வந்து தொட்டியில் நிரப்பினான். பலமுறை செய்தும் தொட்டி நிரம்பாமல் போகவே கோபமடைந்து வாளை எடுத்து இறைவனை வெட்ட முயல்கிறான். இறைவன் வாளைப் போக்கித் தானே அம்மாணிக்கம் என்பதைக் காட்ட மன்னன் மகிழ்ந்து சிவத் தொண்டு செய்து பேறு பெற்றதாக புராணவரலாறு கூறுகிறது. கருவறையில் லிங்கத்தின் மேற்பகுதி சற்று வெட்டப்பட்டுள்ளதைக் காண்பித்து புராண வரலாற்றுச் செய்தியினைக் கூறுகின்றனர்.

ஆம்! தீர்த்தம் எடுக்கும் பணி இன்றும் தொடர்கிறது. 8 கீ. மீ. தொலைவில் ஓடும் காவிரி ஆற்றிலிருந்து இறைவனுக்கு அபிடேகம் செய்ய குடத்தில் நீர் எடுத்துக் கொண்டு நடந்தே வருகின்ற காட்சியை இன்றும் காணலாம். இதுவே இத்தலத்தின் சிறப்பாகும்.

### திருவிழாக்கள்

இக்கோயிலில் நடைபெறும் கார்த்திகை சோமவாரம், தைப்பூசம், பங்குனி உத்திரம், சித்திரை மாதத்தில் நடைபெறும் தேர்த்திருவிழா ஆகியவை சிறப்பான விழாக்களாகும்.

### ஓரே நாளில் மூன்று தலங்கள்

அய்யர்மலை, குளித்தலை கடம்பர் கோயில், குளித்தலை அருகே காவிரி ஆற்றின் எதிர்கரையில் அமைந்திருக்கும்திருஈங்கோய் மலை ஆகிய மூன்றும் வழிபாட்டுத் தொடர்பு உள்ள கோயில்களாக விளங்குகின்றன. "காலைகடம்பர், மத்தியானச் சொக்கர், அந்தி ஈங்கோய்நாதர்" என்ற சொல் வழக்கு உள்ளது. காலையில் குளித்தலை, மதியம் அய்யர்மலை, மாலையில் ஈங்கோய் மலை மூன்றையும் ஒரே நாளில் வழிபட்டால் நினைத்தது நிறைவேறும். வாழ்க்கை வளமாகும் என்று கூறுகின்றனர். கார்த்திகை சோம வாரம் அன்று இவ்வாறு ஒரே நாளில் வழிபடுவது சிறப்பானதாக விளங்குகிறது.

### இலக்கியச் சிறப்பு

திருநாவுக்கரசர் பெருமான் அருளிய திருப்பதிகம் அருணகிரி நாதரின் திருப்புகழ்,





காவிரி ஆற்றில் இருந்து தீர்த்தம் கொண்டு வரும் காட்சி

திருவாரூர் வைத்திய நாத தேசிகர் இயற்றிய திருவாட்போக்கி புராணம், மகாவித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை இயற்றிய வாட்போக்கி கலம்பகம், இரத்தினகிரி உலாபோன்ற இலக்கியங்கள் இத்தலத்தின் சிறப்பினை எடுத்துக் கூறுகின்றன. காஞ்சிபுரம் சிதம்பரமுனிவர் இயற்றிய சேத்திரக்கோவைப் பிள்ளைத் தமிழில் இத்தலத்தைப் பற்றி கூறுகின்றார்.

சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான முத்துசுவாமி தீட்சதர் அவர்கள் இத்தலத்து இறைவனை 'பாகிமாம் ரத்னாசல நாயகர்' என்று போற்றி முகாரி ராகத்தில் ஒரு கீர்த்தனையை இயற்றியுள்ளது மேலும் சிறப்பாகும்.

**கல்வெட்டுகள்**

இக்கோயில் வரலாற்றுச் சிறப்பு உடைய தாகவும் விளங்குகிறது. இக்கோயிலில் சோழ, பாண்டிய, போசள, விஜய நகர மன்னர்கள் சிறப்பான வழிபாட்டிற்கு தானமளித்துள்ளனர் என்பதை இங்கு காணும் ஐம்பதுக்கும் மேற்பட்ட கல்வெட்டுகளிலிருந்து அறிகிறோம். இங்குள்ள இறைவன் திருமாணிக்க மலை உடையார், திருவாட்போக்கி மலை மகாதேவர் எனக் கல்வெட்டுகளில் குறிக்கப்படுவதைக் காணலாம். இக்கோயில் சோழநாடு, கொங்குநாடு பாண்டியநாடு ஆகியவற்றின் எல்லையில் அமைந்திருப்பதால் வரலாற்றில் முக்கிய இடம் பெற்று விளங்குகிறது.

**சமண சமயம் :**

இப்பகுதியில் சமண சமயமும் சிறப்புப் பெற்று விளங்கியதற்கு சான்றுகள் காணப்படுகின்றன.

அய்யர்மலையின் வடக்கு பகுதியில் 2000 ஆண்டுகளுக்கு முன்பு (கி.பி. 1 ஆம் நூற்றாண்டு) சமண முனிவர்கள் இம்மலையில் வாழ்ந்து வந்ததற்கு அடையாளமாகக் கற்படுகைகள் உள்ளன. இதனை 'பனைத்துறை வேசன்' என்பவன் செய்தளித்தான் என்பதை இங்கு காணும் தமிழ் பிராமி கல்வெட்டு எடுத்துக் கூறுகிறது. அய்யர் மலைக்கு அருகில் சத்திய மங்கலம் என்ற ஊரில் உருண்டையான பாறை உள்ளது. அதனை குண்டாங்கல்லு பாறை என அழைக்கின்றனர் இப்பாறையில் தீர்த்தங்கரர் சிற்பமும் செதுக்கி அமைக்கப்பட்டுள்ளது சிறப்பானதாக விளங்குகிறது.

**சிவபாதசேகர மங்கலம்**

அய்யர் மலைக்கு அருகே 'சிவாயம்' என்ற ஊரில் சிறப்பு மிக்க சிவபுரீசுவரர் திருக்கோயில் அமைந்துள்ளது. கல்வெட்டுகளில்இவ்வூர் 'சிவபாதசேகர மங்கலம்' என அழைக்கப்படுகிறது. இக்கோயில் கோபுரவாயிலில் உள்ள மரக்கதவுகளில் இராமாயணக் கதை முழுவதும் அழகிய சிறு சிறு சிற்பங்களாக செதுக்கப்பட்டு கண்ணுக்கு விருந்தாக அமைந்துள்ளது.

வழிபாட்டுச்சிறப்பு, இலக்கிய, சமய, வழிபாட்டுச் சிறப்புகள் கொண்டதாக அய்யர் மலை இரத்தின கிரீசுவரர் கோயில் விளங்குகிறது. "ஆடல் பாடல் உகந்த வாட்போக்கியை பாடியேத்த நம் வாட்டம் தவிருமே" என நாவுக்கரசர் போற்றுகின்றார். நாமும் சுரும்பார் குழலி சமேத இரத்தினகிரீசுவரை வழிபட்டு நலமடைவோம்!



# வியர்வை வழியும் முருகன்

கந்தர் சஷ்டியின்போது தம்தாயார் வேல் நெடுங் கண்ணி அம்மையிடம் சிக்கல் முருகப் பெருமான் வேல்வாங்கும் ஐதீகம் நடைபெறும். தாயிடம் வேல் வாங்கும் போது முருகப்பெருமானுக்கு முகத்தில் வியர்வைப் பொங்கி வழியும். இதைக் கண்டு பக்தர்கள் பரவசம் கொள்ளுவதை ஆண்டுதோறும் காணலாம்.

# கேள்வி- பதில்



வாசகர்களின் கேள்விகளுக்கு நம் வேண்டுகோளுக்கு இணங்க பதில்கள் அளித்துள்ளார் நாடறிந்த தமிழ்ப் பேராசிரியர்

"செந்தமிழ் வாரிதி"
டாக்டர் இரா. செல்வ கணபதி
அவர்கள்.

ப. செந்தில் குமார், சேலம்

★★★கேள்வி : திருஞானசம்பந்தர்

"சடையாய் எனுமால்
சரண் நீ எனுமால்"

எனத் தொடங்கும் திருப்பதிகம் பாடித் திருமருகல் திருத்தலத்தில் அரவு கடித்து மாண்ட வணிகன் உயிரை மீட்டுத் தந்ததாக அவர்தம் வரலாறு வாயிலாக அறிகின்றோம். இத்தகைய அற்புதங்களை இன்றும் தேவாரத் திருப்பதிகங்கள் ஆற்ற வல்லனவா? யாரேனும் அரவம் கடித்து மாண்டால் அப்பதிகம் பாடித் தாங்கள் உயிரை மீட்டுத் தரமுடியுமா? தகுந்த விளக்கம் கூறி உதவிட வேண்டும்.

**பதில் :** சமய வாழ்வு என்பது அளப்பரிய நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டது. தம்கன்றுக்கு மடிசுரக்கும் தாய்ப்பசு, தோல் கன்றுக்கும் பால்சுரக்கும். அதுபோல் தேவார ஆசிரியர்கள், சமூகநலம், நோய் நீக்கம், செல்வ வளம் முதலியன வேண்டிப்பாடிய அருட்பனுவல் அதே மனநிலையில் நம்பிக்கையுடன் நாமும் ஓதினால் அவர்கள் பெற்ற பயனை நாமும் பெறலாம்.

கடந்த ஆயிரம் ஆண்டுகளில் இவ்வாறு திருமுறைகள் ஓதித் தொழு நோய் நீக்கம், மகப்பேறு, பொருள் வளம் பெற்ற உண்மை வரலாறுகள் ஏராளம் உள்ளன.

அத்தகு நம்பிக்கை ஊட்டும், துன்பம் நீக்கும் பதிகங்களில் 36 பதிகங்களைத் தொகுத்து நானும் "இடர்களையும் திருப்பதிகம்" என்ற பாராயண நூல் ஒன்றை வெளியிட்டேன்.

'சிவன்அருள்' தனிமனித ஒழுக்க நெறி நிற்பாருக்கும், சமூக ஒழுக்கத்தில் தலை நிற்பவர்களுக்கும் கூடுதலாக அமையும். **"ஒழுக்கநெறி நின்றார் நீடு வாழ்வார்"** என்பது நினைவு கூரத் தக்கது.

திருமருகல் குறித்த வினாவை நோக்கலாம். திருஞானசம்பந்தர் முதலிய அருளாளர்கள் சிவனருள் பெற்று படைத்தல் முதலிய ஐந்தொழில்களையும் நிகழ்த்தும் வல்லமை பெற்றவர்களாகத் திகழ்ந்தனர். "சடையாய் எனுமால்" என்ற பதிகத்தை இன்று ஓதினால், அரவு தீண்டி இறந்த ஒருவன் உயிர்பிழைப்பானா என்று கேட்டிருக்கிறீர்கள். திருஞான சம்பந்தருக்கு இருந்த பக்குவமும், பத்திமையும் உடையார் அதேபாடலை ஓதினால் இறந்தவர் பிழைப்பர். இது உறுதி.

இந்த வினாவிற்குச் சேக்கிழார் ஓர் அருமையான விடை தருகிறார். திருமணம் செய்து கொள்வது என்று விரும்பி ஓர் ஆண்மகனும் ஒரு பெண்மகளும் பெற்றோருக்குத் தெரியாமல் இரவோடு இரவாக பல நாட்கள் நடந்து திருமருகல் வந்து நள்ளிரவில் சத்திரத்தில் தங்குகின்றனர். இரவு ஒரு நாகப் பாம்பு தீண்டிக் காதலன் இறக்கிறான். அதனை அறிந்த அவன் காதலி 'மாமனே! எங்கிருந்தோ வந்த பாம்புக்குக் கூட உன்னைத் தீண்டும் உரிமை இருந்தது. ஊரறிய உனக்கும் எனக்கும் திருமணம் நடக்காத நிலையில் உன்னைத் தீண்டி அழும் உரிமை கூட எனக்கு இல்லையே என்று அரற்றி அழுகிறாள்.



"வாளரவு தீண்டவும் தான் தீண்டகில்லாள்" என்பது சேக்கிழார் பதில்.

இர்வு நேரத்தில் தனி வழியில் பலகாலம் பயணித்த இத்தமிழகத்தின் பண்பாட்டு ஆண்மகனும், ஒழுக்கம் நிறை பெண்மகளும், திருமணத்திற்கு முன் ஒருவரை ஒருவர் தீண்டலாகாது என்ற சமூக ஒழுக்கம் காத்தார்களே! அத்தகு ஒழுக்கம் காத்தாருக்கு ஒரு மரணம் வந்தால் இப்பதிகம் பாடி உயிர்ப்பிப்பது சாத்தியமாகும்.

எனவே, சமூக ஒழுக்கத்தில் தலை நிற்பவர்களுக்குச் சிவன் அருள் சித்திக்கும் என்பது தெளிவாகிறது.

திருஞானசம்பந்தர் காலத்தில் எத்தனையோ பேர் இறந்திருப்பர். அவர்களை எல்லாம் அவர் உயிர்ப்பிக்க முயன்றதாக வரலாறு இல்லை. என்பதையும் நாம் நினைவில் கொள்ள வேண்டும்.

இரா ஆறுமுகம், திருக்கழுக்குன்றம்

★★★**கேள்வி :** திருக்கழுக்குன்றத்திற்கு வருகை தந்த "ஹாவட்" என்னும் டச்சுகாரர் ஒருவர் கழுகுகள் வந்து உணவு உட்கொள்வதைத் தாமே நேரில் கண்டு வியப்புற்றதாகத் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார். இன்று அக்கழுகுகள் ஏன் வருவதில்லை?

**பதில் :** கடந்த ஏழு ஆண்டுகளுக்கும் மேலாகக் கழுகுகள் வருகை நின்றுவிட்டது என்பது பெரிய ஏமாற்றமே.

(அ) கலியுகத்தில் பூடா, விருத்தா என்று இரு முனிவர்கள் சாரூபப் பதவி வேண்டிச் சிவனை நினைத்து தவம் செய்தனர். இறைவன் தோன்றி சாரூபம் தர முனைந்த போது அதனினும் மேலான சாயுச்யப் பதவி வேண்டினர். இறைவன் இப்பதவியில் சிலகாலம் இருங்கள். பின் சாயுச்சயம் தருகிறேன் என்றார். அவர்கள் அதற்கு உடன் படாமையின் அவர்களைப் பெருமான் கழுகு உருவம் அடைக என சாபமிட்டார்! அவர்களே சம்பு, ஆதி என்னும் பெயருடன் கழுகுகளாய் கழுக்குன்ற இறைவனை வழிபட்டு, நண்பகலில் அமுதுண்டு நின்றனர் என்பது புராண வரலாறு.

சாயுச்சயம் பதவி பெறும் பக்குவம் வந்து அவர்கள் சாப விமோசனம் பெற்றிருக்கலாம் எனபது ஒரு நிலை.

(ஆ) பறவைகள் பெரிதும் பாதுகாப்பு உணர்வு மிக்கன. நாளும் நாளும் உணவு கொள்வதைக் காண வந்த கூட்ட மிகுதி காரணமாக அவை தமக்குப் பாதுகாப்புக் குறைந்து வருவதை உணர்ந்து வருகை நிறுத்தியிருக்கலாம்.

(இ) சுற்றுப்புறச் சூழல் மாசுப்பட்டு வருவது :

விண்ணில் விமானம் முதலியவற்றால் எழும் ஓசை மற்றும் புகை மண்டலங்கள் : காடுகளை நாம் பெருமளவு அழித்து வரும் அறியாமை முதலியன அவை அருகில் தொடர்ந்து வாழ்வதற்கு இடையூறாக அமைந்திருக்கலாம்.

அவை மீண்டும் வர வேண்டும் என்று கழுக்குன்றப் பெருமானுக்கு நாம் விண்ணப்பம் வைப்போம்.

சரவண சுமதி திருச்சி

★★★**கேள்வி :** இறைவர் சிறுத்தொண்ட நாயனாரிடம் பிள்ளைக்கறி கேட்டதும், இயற் பகைநாயனாரிடம் அவர்தம் துணைவியாரைத் தருமாறு கேட்டதும் "சரி" எனத் தாங்கள் கருதுகின்றீர்களா? தகுந்த விளக்கம் தந்து உதவுமாறு கேட்டுக் கொள்கின்றேன்.

**பதில் :** சைவம் ஓர் அன்புச் சமயம்

என்பதற்கு மாறாகவே சிறுத்தொண்டர் வரலாறு தோன்றும். தமிழ்ச்சமுதாய சமூக மரபொழுக்கங்களுக்கு முற்றிலும் முரணாகவே இயற்பகைநாயனார் காட்சி தருகிறார்.

தமிழ் அறிந்து, பெரியபுராணம் படித்து நெகிழ்ந்த ஒரு மேற்கு நாட்டுச் சகோதரர், அடுத்த முறை பெரிய புராணத்தை அச்சிடும் போது, மேற் குறித்த இரண்டு வரலாறுகளையும் நீக்கிவிட்டு அச்சிடுங்கள் என்றாராம். சில வற்றை இங்கே நினைவு கூர்தல் வேண்டும். நாம் இயலாது - இவை இது சாத்தியமன்று என்று சராசரி மனிதர்கள் கருதும் செயல்களை எளிதாகச் செய்து முடித்தவர்களே 'செயற்கரிய செய்த பெரியார்.'' அத்தகையவரே பெரியபுராண நாயன்மார். ஓர் ஐந்நூறு ஆண்டு இடைவெளியில் இத்தகு சாதனை நிகழ்த்தியோர் அறுபத்து மூன்று பேர் மட்டுமே என்பதை முதலில் கருதிப் பார்க்க வேண்டும்.




நம்மால் இயலாது என்பது எல்லாம் பிறருக்கும் இயலாது என்று கருதுவது நிரம்பாது.

ஒரு கொள்கையை வரித்துக் கொள்வது, அதில் உறுதியாகத் தலை நிற்பது, கொள்கையை நிலை நாட்ட எதனையும் செய்வது என்பது திண்ணிய உள்ளமுடையாரின் செயல்களாகும்.

சிறுத்தொண்டர் வரலாற்றில் இவையே நிழலாடுகின்றன.

நாளும் ஒரு சிவனடியாரை முன்னதாக உண்ணச் செய்து பின்னரே தாம் உண்பது என்பது அவர் வரித்துக்கொண்டது.

என் அன்பன் சிறுத்தொண்டன் மனஉறுதி மிக்கான் என்பதை உலகத்துக்கு உணர்த்தவே சிவனார் வருகை அமைகிறது. அவர் உன் பிள்ளைக் கறியை எனக்கு இடு என்று கேட்டதாக ஒரு செய்தியும் பெரியபுராணத்தில் இல்லை.

எந்த ஒரு நிலையிலும் இவ்வாறான உணவை அளிக்க இயலாது என்று கூறுவதற்கும் சிறுத்தொண்டருக்குத் தடை ஏதும் இல்லை.

சிவனடியார் அடுத்தடுத்து விதிக்கும் நிபந்தனைகள் தன் ஒரே மகனைக் குறித்து வருவதை உணர்ந்தே சிறுத்தொண்டர் இசைகிறார்.

கணவர் கொள்கை வழி நிற்பதற்கு அவர் துணைவியாரும் உற்ற துணையாதல் அரிய ஒரு செயல்.

ஒரு நிலையில் சிறுத்தொண்டர் பேதலித்து அடியாருக்கு முன்னதாகத் தான் உண்ணத் தலைப்படும்போது இறைவர் சிறுத்தொண்டர் கையைப் பற்றித்தடுப்பதாகச் சேக்கிழார் கூறுகிறார். அச்செயல் சிறத்தொண்டரை மேலும் துன்புறுத்த அல்ல. அடியாரை முன் ஊட்டிப் பின் உண்ணும் அவர் கொள்கை பிழைபட்டு விடக்கூடாது என்பதில் இறைவன் காட்டும் அக்கறையின் வெளிப்பாடு அது.

மூன்று செய்திகள் இவ்வரலாற்றால் விளக்கப்பட்டுள்ளன.

மூவகைப் பற்றுக்கள் (ஏடணை) மனிதனைப் பற்றி நிற்பன. அவற்றுள் பிள்ளை மேல் கொண்ட பற்று (புத்திர ஏடணை) அறுத்த வரலாறு இது.

இது குறித்தே பட்டினத்தார் "வாளால் மகவரிந்து ஊட்ட வல்லேன் அல்லேன்'' எனப் பாடுகிறார்.

என்னால் எதுவும் முடியும் என்ற நிலை அற்று விடும்போது இறைக்காட்சிச் சித்திக்கும் என்ற உண்மையை உணர்த்துகிறது.

அடுத்தது, இயற்பகையார் வரலாறு. இவர்செய்த செயல் உலக இயற்கைக்கு மாறானது என்பதால் தான், இவருக்கு இயற்பகையார் என்று பெயரே வந்ததாகச் சேக்கிழார் குறிக்கிறார்.

என்னிடம் எந்த ஒரு பொருள் இருந்தாலும் அது சிவனடியாருக்கு உரியது என்பதே இயற்பகையாரின் நடைமுறைக் கோட்பாடு.

நம்மால் எட்ட முடியாத ஓர் உயர்ந்த மனநிலை இயற்பகையாருடையது. அவருடைய பார்வையில் மனைவியும் வழங்குவதற்குரிய ஒரு பொருளாகவே நிற்கிறார்.

கணவர் கருத்துக்கு மறுப்புரைக்காது இசையும் அவர் துணைவியாரின் மனநிலை வியப்பூட்டுவது.

பொருள்களைப் பற்றிய மதிப்பீடுகள் பொருள் சார்ந்ததன்று; அதற்கு உரியாரின் மனநிலை சார்ந்தன அவை.

தொடர்புடைய இருவர் இசைந்து செய்த செயல் மீது நமக்கு வினா எழுப்பும் உரிமை உண்டா என்ற ஐயம் எழுகிறது.

இச்செயல் நிகழ்ந்த காலத்துச் சமூகம் இச்செயலை உடன்படாது எதிர்ப்புத் தெரிவித்து போராடி, உயர்நீத்த பதிவுகளும் பெரியபுராணத்தில் உள்ளன.

சுந்தரர் இவ்வரலாற்றைப் பதிவு செய்கிறார். கதை நடத்த வேண்டிய கடமை சேக்கிழாருக்கு அமைகிறது. அதை அவர் மிகக்கவனமாகவே செய்கிறார்.

இவ்வரலாறு வெல்லமாட்டாத மூவாசைகளில் ஒன்றாகிய மனைவி மீது கொண்ட ஆசையை (தார ஏடணை) வென்ற வரலாறு.

இக்கதை நடத்தும் சேக்கிழார் ஓர் இடத்தில் தம் உணர்வை அழகுறப் பதியவே செய்கிறார்.



பூம்புகார் இயற்பகையார் மனைவியை வேண்டிப் பெற சிவபெருமான் கயிலையிலிருந்து புறப்பட்ட போது, உமையம்மைக்கு இதுபற்றி அறிவித்துப் புறப்பட்டாரா? உமையம்மைக்கு அறிவிக்காது புறப்பட்டாரா? நான் அறியேன் என்கிறார்.

உமையம்மைக்குத் தெரிவித்திருந்தால் இந்நிகழ்வு நடந்திருக்காது என்பது சேக்கிழார் குறிப்பு போலும்.

# சுந்தரபாண்டியம் அருள்மிகு வைகுண்டமூர்த்தி சுவாமி திருக்கோயில் மகாகும்பாபிஷேகம்

டாக்டர் வை. பழனிச்சாமி, எம்.ஏ., பி.எல்., பி.எச்.டி., இ.ஆ.ப.(ஓய்வு) அவர்கள்
தமிழ்நாடு மாநிலத் தேர்தல் ஆணையாளர், சென்னை.

"என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே!

என்ற ஆனந்தப் பரவச நிலையை இன்று நான் பெற்றுள்ளேன்.

என் தாயும் தந்தையும் அவர்களின் தாயும் தந்தையும் - இவ்வாறு என் மூதாதையர்கள் - என்னைப் போன்றே பல்லாயிரக் கணக்கானவர்களின் மூதாதையர்கள் எல்லாம் வழிபட்ட எங்கள் குலதெய்வமாம் சுந்தரபாண்டியம் அருள்மிகு வைகுண்டமூர்த்தி சுவாமி திருக்கோயில் திருப்பணிகளை எடுத்து நடத்துவதற்கும், மகத்தான இன்றைய(*31.5.04*) திருக்குட நீராட்டு விழாவினை முன்னின்று நிகழ்த்துவதற்கும் எனக்குக் கிடைத்த பெரும் பேற்றினை, இறைப்பணியை எண்ணி எண்ணி என் உள்ளம் பூரிக்கின்றது.

"திருக்கோயில் பொருந்த ஓர் செங்கல் இடுவார் உலகு ஆள்வார்" என்று ஒரு பழமொழி மக்களிடம் வழங்கி வருகின்றது.

கோயில் திருப்பணிக்கென்று ஒரு செங்கல்லை நன்கொடையாகத் தந்தாலும், அந்தப் புண்ணியப் பலன் காரணமாக இந்த உலகையே ஆளலாம் என்று நம் பெரியவர்கள் கூறிச் சென்றுள்ளார்கள்.

கோடானகோடி மக்கள் இந்தப் பூவுலகில் தோன்றி மறைந்து வருகிறார்கள். அத்தனைக் கோடி மக்களில் யாரொருவர் திருக்கோயில் திருப்பணிக்கென்று பாடுபட்டார்களோ அவர்கள் என்றென்றும் சரித்திரத்தில் வாழ்ந்து கொண்டுள்ளார்கள்.

தஞ்சையில் பெரிய கோயிலைக் கட்டிய இராஜராஜ சோழனை இன்றும் வரலாறு வாழ்த்திக் கொண்டுள்ளது.



நம் உயிரினும் மேலான தமிழ் மொழியில் தொல்காப்பியம், சங்க இலக்கியங்களான அகநானூறு, புறநானூறு போன்ற எட்டுத் தொகை, நூல்கள் பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க் கணக்கு போன்ற இலக்கியங்கள் இருந்தாலும் எனக்குப் பிடித்த பக்தி இலக்கியங்கள் நாலாயிரத் திவ்விய பிரபந்தமும், திருமுறைகளும் ஆகும். அறுபத்துமூன்று நாயன்மார்களில் ஒரு நாயனார் "கோச்செங்கணான்" என்பவர். இவருடைய பெருமையை இன்றும் பெரிய புராணம் போற்றிக் கொண்டிருக்கிறது.



முற்பிறவியில் சிலந்தியாகப் பிறந்திருந்த "கோச்செங்கணான்" சிவலிங்கத்தின் மேல் வெயில் படாமல் தன் வாய் நூலினால் கோயில் கட்டியதாகவும், அந்தப் புண்ணியப் பலன் காரணமாக மறுபிறவியில் மன்னனாகப் பிறந்து சிவபெருமானுக்கு 70 மாடக் கோயில்களைக் கட்டிப் புகழ்கொண்டு வாழ்ந்ததாகவும் பெரிய புராணம் போற்றுகின்றது. திருநாவுக்கரசு சுவாமிகளும் தேவாரத்தில் 70 மாடக் கோயில்கள் அமைத்த "கோச்செங்கணான்' புகழைப் பாடிப் போற்றுகின்றார்.

பெரிய புராணத்தில் சேக்கிழார் பெருமான் கோச்செங்கணான் பிறந்த பொழுதே நிகழ்ந்த ஒரு அற்புதத்தை விவரிக்கின்றார்.

கோச்செங்கணானின் தந்தையார் பெயர் சுபதேவன், தாயார் பெயர் கமலவதி. நிறைமாதக் கர்ப்பிணியாக உள்ளார். குழந்தை பிறக்கப் போகும் நேரத்தில் சோதிடர்கள் ஒரு தகவலைச் சொல்கிறார்கள். " பிறக்கும் குழந்தை ஒரு நாழிகை கழிந்த மங்கல நேரத்தில் பிறந்தால் சிவபெருமானுக்கு ஒன்றல்ல, பற்பல கோயில்கள் கட்டி அதனால் மாபெரும் சிறப்பினைப் பெற்று வாழும்" என்று சோதிடர்கள் சொல்கிறார்கள். உடனே அந்தத் தாய் கமலவதி சேடிப் பெண்களை அழைத்துத் தன்னைத் தலைகீழாகக் கட்டித் தொங்க விடுமாறு செய்கிறார். அந்த வேதனையைத் தாங்கிக்கொள்கிறார். சோதிடர்கள் சொன்ன மங்கல நேரம் வருகறது. பிறகு அரசி கமலவதி குழந்தையைப் பெற்றெடுக்கிறார். தலைகீழாகத் தொங்கிய காரணத்தால் குழந்தை பிறந்தவுடன் அதன் கண்கள் இரத்தச் சிவப்பாக இருக்கக் காணுகின்றார்.

"என் கோ, செங்கண்ணனா?" என்று கேட்டபடியே தாய் கமலவதி உயிர் நீத்து விடுகிறாள்.

தன் மகன் கோயில்கள் அமைத்துப் பெரிய சிறப்பினைப் பெற வேண்டும் என்று தன் உயிரைத் தியாகம் செய்த புனிதத் தாய் கமலவதி இன்றும் பெரிய புராணத்தில் சிறப்பித்துப் பேசப்படுகின்றார்.

**"சிவாலயங்கள் காதலோடும்**
**பல எடுக்கும் தொண்டு புரியும்**
**கடன் பூண்டார்"**

என்று வரலாறு கொண்டாடும் " "கோச்செங்கணான்" புகழை இன்று நான் மகிழ்வோடு நினைத்துப் பார்க்கின்றேன்.

பராக்கிரம பாண்டியன் என்றொரு மன்னன் கி.பி 15 ஆம் நூற்றாண்டிலே தென்காசியிலே காசி விசுவநாதர் ஆலயத்தைக் கட்டியுள்ளான். அந்த ஆலயத்திலே சில கல்வெட்டுப் பாடல்களைப் பாடிப் பதித்து அவன் வைத்திருக்கின்றான். அக்கல்வெட்டுப் பாடல்களிலே அம்மாமன்னன் என்ன கருத்தினைச் சொல்லிச் சென்றிருக்கிறான் தெரியுமா?

"இந்தக் கோயிலை நான் கட்டவில்லை. என்னைக் கருவியாகக் கொண்டு காசி விசுவநாத சுவாமியே இந்தத் திருக்கோயிலை அமைத்துக் கொண்டுள்ளார். வருங்காலத்தில் இந்தப் பிரம்மாண்டமான

இப்பொன்னான வேளையில் இங்கே எடுத்துக் காட்டுவது சாலப் பொருத்தம் உடையதாகத் திகழும் என்று நான் எண்ணுகிறேன்.

1) "மனத்தால் வகுக்கவும் எட்டாத கோயில்
வகுக்க முன்நின்று
எனைத்தான் பணிகொண்ட நாதன்
தென்காசியை என்றும் மண்மேல்
நினைத்து ஆதரஞ்செய்து அங்குகாவல் பூண்ட
நிருபர்தம்
துணைத் தாழ்ந்து இறைஞ்சித்
தலைமீதில் யானும் தரித்தனனே"

2) "ஆராயினும் இந்தத் தென்காசிமேவும்
பொன் ஆலயத்து
வாராததோர் குற்றம் வந்தால்
அப்போது அங்குவந்து அதனை
நேராகவே ஒழித்துப் புரப்பார்களை
நீதியுடன்
பாரோர் அறியப் பணிந்தேன்
பராக்கிரம பாண்டியனே"

3) "அரிகேசரிமன் பராக்கிரம மாறன்
அரன் அருளால்
பரிசேர் பொழில் அணி தென்காசிக்கோயில்
வகுத்து வலம்
புரிசேர் கடற்புவி போற்றவைத்தேன்
அன்பு பூண்டு இதனைத்



கோயிலில் சிறுசிறு பழுதுகள் உண்டாகக் கூடும். அப்போது அதைத் திருப்பணி செய்வதற்கு நான் இருக்க மாட்டேன். என் காலத்திற்குப் பிறகு இக்கோயிலில் ஏற்படும் பழுதுகளைத் திருப்பணி செய்து தருவதற்குப் பற்பல அன்பர்கள் தோன்றி வருவார்கள். அவ்வாறு தோன்றி, இக்கோயில் திருப்பணியிலே தம்மை ஈடுபடுத்திக் கொள்ளக் கூடிய அன்பர்களின் பாதங்களை என் தலைமேல் வைத்து இப்போதே என் வணக்கங்களை அவர்களுக்குப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கின்றேன்."

இப்படி அந்த மாமன்னன் கல்வெட்டில் சில பாடல்களைச் செதுக்கி வைத்துச் சென்றுள்ளான் என்றால் "கோயில் திருப்பணி" செய்வோர் பெருமைக்கு எல்லையே இல்லை என்பது தெளிவாகின்றது அல்லவா!

அப்புகழ்மிக்க தென்காசிக் கோயிற் கல்வெட்டுப் பாடல்களை



# அதிசய சிவலிங்கங்கள்

திருநீடூரில் ஒரு நண்டு சிவபெருமானை வழிபட்டுள்ளது. சிவலிங்கத்தின் உச்சியில் நண்டு வளை இருப்பதை இன்றும் காணலாம்.

பிருங்கிமுனிவர் வண்டு வடிவெடுத்து சிவபெருமானை வழிபட்டார். திருநல்லூர் சிவலிங்கத்தில் வண்டு துளைத்த குறியை இன்றும் காணலாம்.

திருவான்மியூரில் காமதேனு பால் சொரிந்து வழிபட்டதால் இறைவர் "பால்வண்ணநாதர்" என அழைக்கப்படுகிறார். காமதேனுவின் காற்குளம்பினால் ஏற்பட்ட வடுவை இங்கு நாம் காணலாம்.

திரிசேர் விளக்கெனக் காப்பார்
பொற்பாதம்
என் சென்னியதே"

4) "சாத்திரம் பார்த்திங்கு யான்கண்ட
பூசைகள் தாம் நடாத்தி
ஏத்தி அன்பால் விசுவநாதன்
பொற்கோயில்
என்றும் புரக்கப்
பார்த்திபன் கொற்கைப் பராக்கிரம
மாறன்
பரிவுடன் நம்
கோத்திரந் தன்னில் உள்ளார்க்கும்
அடைக்கலம் கூறினனே"

மேலே நான் சொன்ன நான்கு பாடல்களும் நான்கு வேதங்களைப் போல் கொண்டாடிப் போற்றத் தக்கவை ஆகும்.

இன்றைக்கு நம் கோயில் திருப்பணி திருக்குட நீராட்டு விழா காரணமாக சுந்தர பாண்டியம் மட்டுமல்ல, சுற்றியுள்ள ஊர்கள் எல்லாம் கூட சாலை வசதி உள்ளிட்ட பல வசதிகளைப் பெற்றிருக்கும் சிறப்பினை நான் சுட்டிக்காட்ட விழைகின்றேன்.

இதற்காக நம் தமிழக அரசு சுந்தரபாண்டியம் முதல் கோட்டையூர் வரை உள்ள 5 1/2 கிலோமீட்டர் சாலையை சீரமைப்பதற்காக ரூ. 23.20 இலட்சத்தை வாரி வழங்கியிருப்பதற்கு என் மனமார்ந்த நன்றியை முதற்கண் தெரிவித்து மகிழ்கிறேன்.

"நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தன்" என்று திருஞான சம்பந்தரை அருளாளர்கள் புகழ்ந்து கூறுவார்கள். அதைப்போல நாளும் திருப்பணிகளால் தமிழகத்தில் உள்ள பல்லாயிரக்கணக்கான கோயில்களை சீரமைக்கும் புனிதப்பணியில் ஈடுபட்டு **"உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே"** என்னும் சங்கப் பாடலுக்கு உயிர் கொடுக்கும் வகையில் தமிழகத்தில் உள்ள திருக்கோயில்களில் அன்னதானம் செய்து அறம் வளர்த்து வரும் **"அறம் வளர் நாயகி"** ஆக திகழ்ந்து வரும் நம்முடைய மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் நம் திருக்கோயில் திருப்பணிக்கு ஆற்றிவரும் அரும்பணிகளைப் போற்றுவதற்கு வார்த்தைகளே இல்லை. இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை ஆணையாளர் பொதுநல நிதியிலிருந்து திருக்கோயிலுக்கு வரும் பக்தர்கள் தங்கி, வசதியாக வழிபடுவதற்கு யாத்ரீகர் தங்கும் விடுதி கட்ட வேண்டுமென்று கோரிக்கை வைத்தேன். மாண்புமிகு அறநிலைய ஆட்சித்துறை அமைச்சர் அவர்கள் உடனே ஆவன செய்வதாகக் கூறி யாத்ரீகர் தங்கும் விடுதி கட்டுவதற்கு ஆணையர் பொதுநல நிதியிலிருந்து ரூ.8 இலட்சம் வழங்க ஆணையிட்டு அந்த யாத்ரீகர் தங்கும் விடுதிக்கு அவர்களே அடிக்கல் நாட்ட ஒப்புக்கொண்டமைக்கும் நாம் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளோம்.



# அஷ்ட பந்தனம்

(கும்பாபிஷேகத்திற்குத் தேவையானது)

| | |
|---|---|
| கொம்பரக்கு | பங்கு 1 |
| கருங்குங்கிலியம் | பங்கு 3 |
| சுக்கான் | பங்கு¾ |
| காவிக்கல் | பங்கு 3 |
| வெண் மெழுகு | பங்கு 3 |
| வெண்ணெய் | பங்கு 3 |
| செம்பஞ்சு | பங்கு 3 |
| சாதிலிங்கம் | பங்கு¼ |

இவற்றை சேர்த்து இடித்து இளமெழுகு பதத்தில் எடுத்துச் செய்வது அஷ்டபந்தன மருந்தாகும்.



# தமிழகத்தில் திருத்தலங்கள்

"புலவர் ஏறு"ந.ரா.முருகவேள், M.A., M.O.L.,

முன்னுரை :

நமது தமிழகம், பலவகைச் சிறப்புகளை உடையது. நமது தமிழகத்திற்போல எண்ணில்லாத் திருத்தலங்கள் அமைந்திருக்கும் நாடு, வேறு பிறிதெதுவும் இல்லை எனலாம். ஆழ்வார்களும் நாயன்மார்களும் போன்ற அருட்பெருஞ் சான்றோர்கள் பற்பலர் தோன்றித்தத்தம் பாடல்களில் போற்றிப் புகழ்ந்து துதித்து மகிழ்ந்த பழம்பெரும் தலங்கள் நூற்றுக் கணக்கில் அமைந்து, நம் தமிழகத்தை ஒப்புயர்வற்ற புண்ணிய பூமியாகச் செய்து புனிதப் படுத்தி வருகின்றன.

இப்புண்ணிய பூமியில் வந்து பிறப்பதற்குத் தேவர்களும்கூட, மிகவும் விரும்புகின்றனராம், "நாம் மண்ணுலகில்-பாரத தேசத்தில்-தெய்வத் தமிழ்நாட்டில் சென்று பிறக்கும்பேறு பெறவில்லையே! இங்கே விண்ணுலகில் இருந்துகொண்டு நாம் நம் வாணாளை வீணாக்கிக் கொண்டிருக்கின்றோமே! சிவபெருமானால் ஆட்கொள்ளப்படும் சிறப்பு, நிலவுலகில் சென்று பிறப்பவர்களுக்கன்றோ உரியதாக இருக்கின்றது" என்று எண்ணித், திருமால் முதலிய தேவர்களெல்லாம் ஏக்கற்று நிற்கின்றனராம்.

இச்செய்தியை மாணிக்கவாசகர் தம்முடைய திருவாசகத்தில் , "திருப்பள்ளியெழுச்சி" என்னும் திருப்பதிகத்தின் இறுதிப்பாடலில், அறுதியிட்டு, உறுதியாகச் சொல்லுகின்றார்.

'புவனியிற் போய்பிற வாமையில் நாள்நாம்
போக்குகின்றோம் அவமே; இந்தப் பூமி
சிவன்உய்யக் கொள்கின்றவாறு என்று நோக்கித்
திருப்பெருந் துறையுறை வாய்! திரு மாலாம்

## மும்மூர்த்திகளுக்கு ஆலயம்

ஈரோடு மாவட்டம் கொடுமுடி சிவன் திருக்கோயிலில் சிவபெருமான் லிங்க வடிவில் மூலவராகவும், திருமால் ஸ்ரீரங்கநாத ராகவும், பிரம்மா வன்னிமரத்தடியிலும் காட்சிதருகிறார்கள்.

அவன் விருப்பு எய்தவும், மலரவன் ஆசைப்படவும்,
நின் அலர்ந்த மெய்க் கருணையும் நீயும்
அவனியிற் புகுந்தெமை ஆட்கொள வல்லாய்!
ஆரமுதே! பள்ளி எழுந்தருளாயே!"

மாணிக்கவாசகர் கூற்றின்படி, தேவர்களும் புண்ணிய பூமியாகிய இம் மண்ணுலகில் மனிதராகப் பிறந்தால்தான், இறைவனை வழிபடும் பெறலரும் வாய்ப்பு இனிது கைகூடுகின்றது. எனவே, தேவர்களும் இப்புண்ணிய பூமியில் வந்து இறைவனை வழிபடுகின்றனர். அங்ஙனம் விண்ணுலகத் தேவர்களும் மண்ணுலகில் போந்து வழிபட்டுள்ள தலங்கள், எண்ணில்லாதன பல, நம் பாரத தேசத்திலும், தமிழ்நாட்டிலும் ஏராளமாக உள்ளன. அத் தெய்வத் திருத்தலங்களின் பெருமையை அறிந்து கொள்ளவும், அங்கெல்லாம் சென்று, கண்டு தரிசித்து இறைவனை வழிபட்டு உய்யவும், மக்கள் முயல்கின்றனர் இல்லையே என்று, தாம் இயற்றிய சிவஞான சித்தியார் நூலில், சிந்தை நொந்து வருந்துகின்றார், அருள்நந்தி சிவாச்சாரியார்.

**"மானிடப் பிறவி தானும்**
**வகுத்தது மனவாக் காயம்**
**ஆனிடத் தைந்தும் ஆடும்**
**அரன்பணிக் காக அன்றோ?**
**வானிடத் தவரும் மண்மேல்**
**வந்தரன் தனைஅர்ச்சிப்பர்!**
**ஊன்எடுத் துழலும் ஊமர்**
**ஒன்றையும் உணரார் அந்தோ!"**

**திருத்தலங்கள் :**

இவ்வாற்றால் தெய்வத் திருத்தலங்களின் சிறப்பும், தல வழிபாட்டின் மேன்மையும் இத்தகையன என்று யாவரும் உணரலாம். அருளாளர்கள் வாழ்கின்ற இடங்கள் புனிதம் அடைகின்றன; அவ்விடங்களில் அருளாற்றல் பதிகின்றது. அவ்விடங்களில் அமைதி தரும் சூழ்நிலை ஏற்படுகின்றது. அது மட்டுமன்றி அவ்விடங்களுக்கு மேலுலகில் வாழும் அருளாளர்கள் வந்து செல்கின்றனர். அதனால் அவ்விடங்களில் அவர்களின் தெய்வீக நலங்களும் ஆற்றல்களும் பதிந்து பரவிப் பெருகுகின்றன. இவற்றால் அவ்விடங்கள் புனிதம் மிக்க புண்ணியத் தலங்களாக மாறுகின்றன.

நாம் நம் வாழ்க்கையில் கூர்ந்து நோக்கி ஆராய்ந்து நினைந்து காண்போமாயின் ஒருசில இடங்கள், வேறு பிறசில இடங்களைவிட மனத்திற்கு அமைதியையும், மகிழ்ச்சியையும்



விளைவிப்பதைக் காணலாம். சில இடங்கள் மனம் குவிந்து தியானம் செய்வதற்கு ஏற்றதாக இருக்கும். அவ்விடங்களில் தெய்வச் சிந்தனைகளும், நல்ல சமய உணர்வுகளும், பக்திநெறிப்பாவனைகளும் இயல்பாக உண்டாகும். ஆனால் வெறும் உலகியற் சிந்தனைகளும் செயல்களுமே நிகழ்கின்ற இடங்களிலும், வீண்பேச்சுக்கள், பயனற்ற பொழுது போக்குச் செயல்கள், வறுமொழியாளர் வம்பப்பரத்தர் போன்ற தீயவர்கள் நடமாட்டம் ஆகியன நிகழும் இடங்களில், மேற்குறித்தவற்றிற்கு நேர்மாறான இயல்புகளும் செயல்களும் அநுபவங்களுமே நம்மிடம் நிகழ்தலை நாம் நம் வாழ்க்கையில் கண்டுணரலாம்.

இத்தகைய தீய இடங்களின் வேறாக, அருள் நிறைந்து விளங்கும் அருமை

## அட்ட வீரட்டத் தலங்கள்

| | | |
|---|---|---|
| திருக்கண்டியூர் | - | பிரமன் சிரம் கொய்தது |
| திருவதிகை | - | முப்புரம் எரித்தது |
| திருக்குறுக்கை | - | காமனைக் காய்ந்தது |
| திருவிற்குடி | - | சலந்தரா சுரனைக் கொன்றது |
| திருக்கோவிலூர் | - | அந்தகாசுரனைக் கொன்றது |
| திருப்பறியலூர் | - | தக்கன் யாகம் அழித்தது |
| வழுவூர் | - | யானை உரி போர்த்தது |
| திருக்கடவூர் | - | யமனை உதைத்தது |

வாயிலின் வடபுறம் திருஞானசம்பந்தர் பூம்பாவையுடன் இருக்கிறார். கோவிலின் வடக்குவெளிச் சுற்றிலே அலுவலகத்துக்கு எதிரே புனிதப் புன்னை மரம் இருக்கிறது. அரச கோபுரமென அழைக்கப்படும் கீழை வாயிலில் கூத்தாடும் பிள்ளையார் குறை நீக்கி அருளுகின்றார். மற்றைய தெய்வங்கள் சுற்றிலும் சூழ்ந்திருக்கின்றன.

### கொடிமரம், பலிபீடம், நந்தி

மேற்கு கோபுரத்திற்கு நேரேதிரில் கபாலீசுவரை நோக்கிய வண்ணம் நந்தி அமைந்துள்ளது. நந்தியை யொட்டி கொடிமரமும் பலிபீடமும் அமைந்துள்ளது. இக்கொடிமரம் அண்மையில் புதிப்பிக்கப்பட்டு தங்கமெருகேற்றப்பட்டு பக்தர்களின் சிந்தை குளிரும்வண்ணம் நெடிதுயர்ந்து காட்சியளிக்கிறது. நந்தியம்பெருமானுக்கு விசேஷ காலங்களிலும் பிரதோஷ காலங்களிலும் வெள்ளிக் கவசம் சாத்தப்படுவது காண இனியதாகும்.

### தங்கத்தேர்

இத்திருத்தலத்தின் அருமை பெருமைகளுக்கு அணி சேர்த்திடும் தங்கத்தேர் கலையழகு மிளிர, தெய்வாம்சம் திகழத் திகழ்கின்றது. கபாலீசுவரர் திருத்தலத்திலே நிலை பெற்றிருக்கும் இத்தங்கத்தேரை பக்தர்கள் வழிபட்டு பக்திப்பரவசம் கொள்வர். இத்தேரை வடம்பிடித்து இழுத்து திருவருட்பயனை பெற்றிட அதற்குரிய கட்டணம் ரூ. **1001/-** செலுத்திட வேண்டும்.

### பூசை விவரம்

இக் கோயிலில் காமிக ஆகமப்படி நாள்தோறும் ஆறு காலப் பூசைகள் நடைபெற்று வருகின்றன.

கோபூசை - காலை

திருப்பள்ளியெழுச்சி - **5.00** மணி முதல் **6.00** வரை

முதற்காலம்: வைகறைபூசை - **6.00** மணி முதல் **7.00** மணி வரை

இரண்டாம் காலம் : காலைச்சந்தி-**8.00** மணிமுதல் **9.00** மணிவரை

மூன்றாம் காலம் : **11.30** மணிமுதல் **12.00** மணி வரை

நான்காவது காலம் - சாயங்காலம் **5.00** மணிமுதல் **6.30** மணிவரை

ஐந்தாம் காலம் - பூசை - **6.30** மணி முதல் **7.30** மணிவரை

ஆறாவது காலம் - அர்த்த ஜாமம் - **9.00** மணி முதல் **9.30** மணிவரை

### திருக்கோயில் திறந்திருக்கும் நேரம் :

காலை **6.00** மணிமுதல் நண்பகல் **12.00** மணி வரை

மாலை **4.00** மணிமுதல் இரவு **9.00** மணிவரை

இத்திருக்கோயிலில் தினமும் காலை மாலையில் பக்திப் பாடல்கள் ஒலிபரப்பப்பட்டு வருகிறது. வாரந்தோறும், திங்கள், செவ்வாய், சனிக்கிழமைகளில் சமயச் சொற்பொழிவுகள்



நிகழ்த்தப்பெற்று வருகின்றன. இத்திருக் கோயிலில் பக்தர்களின் வேண்டுகோளுக்கு ஏற்றவாறு தமிழிலும் சமஸ்கிருதத்திலும் அர்ச்சனைகள் செய்யப் பெற்று வருகின்றது. இத்திருக்கோயிலில் பிரதோஷம் வெகு சிறப்பாகக் கொண்டாடப்படுவது குறிப்பிடத்தக்கதாகும்.

### அன்னதானத் திட்டம்

மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் அவர்கள் திருக்கோயில் அன்னதானத் திட்டத்தை **23.03.02** அன்று திருமயிலை அருள்மிகு கபாலீஸ்வரர் ஆலயத்தில் தான் தொடங்கி வைத்தார்கள் என்பது குறிப்பிடத் தக்கது. இத்தகைய வரலாற்றுச் சிறப்புமிக்க திருமயிலை



**மயிலை**

அருள்மிகு கோலவிழியம்மன் திருக்கோயில் திருக்குட நீராட்டு விழா 25.06.2004 அன்று மிகச் சிறப்பாக நடைபெற்றது. பல்லாயிரக் கணக்கான பக்தர்கள் திருக்குட நீராட்டு விழாவைக் கண்டு மகிழ்ந்தார்கள்

கபாலீசுவரர் ஆலயத்திருக்குட நீராட்டு விழாவிற்கான ஏற்பாடுகள் மிகச் சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

## திருப்பணியின் சிறப்பு அம்சங்கள்

1) அருள்மிகு கபாலீசுவரர் திருக்கோயிலில் உள்ள அனைத்துச் சன்னதிகளும் புதுப்பிக்கப்பட்டு புதுப்பொலிவுடன் காட்சியளிக்கிறது.

2) நவராத்திரி மண்டபம் பழுது பார்க்கப்பட்டு வண்ணங்கள் தீட்டப்பட்டு அழகுடன் காட்சியளிக்கிறது.

3) திருக்கோயில் இராஜ கோபுரம் புதுப்பிக்கப்பட்டு 10 இலட்சம் செலவில் பஞ்ச வர்ணம் பூசப்பட்டு அழகுடன் அற்புதமாகக் காட்சியளிக்கிறது.

4) திருக்கோயிலின் ராஜகோபுரத்தின் உள்ள 9 கலசங்கள் தங்க முலாம் பூசப் பெற்று தங்கக் கலசங்களாக மின்னும் வகையில் அமைக்கப்பட்டுள்ளன.

5) திருக்கோயிலின் பிரகாரத்தில் நர்த்தன வினாயகர் சன்னதியில் ஒரு கலசமும், சிங்கார வேலர் சன்னதியில் ஒரு கலசமும், கற்பகாம்பாள் சன்னதியில் - 5 கலசங்களும், கபாலீசுவரர் சன்னதியில் ஒரு கலசமும், திருஞானசம்பந்தர் சன்னதியில் 1-கலசமும், சனீஸ்வர பகவான் சன்னிதியில் ஒரு கலசமும் தங்க மூலாம் பூசப்பெற்று புதுப் பொலிவுடன் மின்னுகின்றன.

6) அருள்மிகு சிங்கார வேலர் சன்னதியில் ரு. 4 இலட்சம் செலவில் புதிய கொடி மரம் தங்க முலாம் பூசப்பட்டு நிறுவப்பட்டுள்ளது.

7) திருக்கோயிலின் அனைத்துச் சன்னதிகளுக்கும் ரூ. 25 இலட்சம் செலவில் புதிய தாகப் பித்தளை கிரில் அமைக்கப்பட்டுள்ளது.

8) திருக்கோயிலின் குளத்தைச்சுற்றி ரூ. 7 இலட்சம் செலவில் இரும்பு கிரில் பழுது பார்த்து பெயிண்டிங் செய்யப்பட்டுள்ளது.

9) நீராழி மண்டபம், மற்றும் 16 - கால் மண்டபம் பழுது பார்த்து கிரில் அமைக்கப்பட்டுள்ளது.

10) திருக் கோயிலின் சமய நூலகம் தூய்மை செய்யப்பட்டு வெளிப்புறம் முழுக்க பெயிண்டிங் செய்யப்பட்டுள்ளது.

11) அருள்மிகு கபாலீசுவரர் சன்னதியிலும் கற்பகாம்பாள் சன்னதியிலும் குளிர்சாதன வசதி செய்யப்பட்டுள்ளது.

12) திருக்குளத்தைச் சுற்றி நந்த வனம் அமைக்கும் பணி நடை பெற்று வருகிறது.

இத்தகைய திருப்பணிகளால் பொலிவு பெற்று விளங்கும் திருமயிலை அருள்மிகு கபாலீசுவரர் திருக்கோயில் திருக்குட நீராட்டு விழாவினைக் காண மெய்யன்பர்களாகிய நாம் மிகவும் கொடுத்து வைத்துள்ளோம்.

திருமயிலை வருக !
திருவருள் பெறுக !




சிறப்பாசிரியர் மற்றும் வெளியிடுவோர் : திருமிகு ஜி. இராமகிருஷ்ணன், இ.ஆ.ப., ஆணையர், தமிழ்நாடு அரசு இந்து சமய அறநிலையஆட்சித்துறை, சென்னை - 600 034.தொலைபேசி : 28334811/12/13
ஆசிரியர் : கவிஞர் டாக்டர். த. அமிர்தலிங்கம், எம்.ஏ., பி.எச்.டி.,
அச்சிடுவோர் : இராயப்பேட்டை எழுதுபொருள் அச்சு மற்றும் உபபொருள்கள் உற்பத்தியாளர் தொழிற் கூட்டுறவு சங்கம் லிமிடெட். சென்னை-14. தொலைபேசி எண் : 28485670




திருவேற்காடு

# அருள்மிகு தேவி கருமாரி அம்மனின்



திருவருளை நாடும்

## ஜானி சவுண்ட் சர்வீஸ்,

கோலடி சாலை, திருவேற்காடு,
சென்னை - 600 077
தொலைபேசி எண் 2680 0867
26800868







திருவேற்காடு

# அருள்மிகு தேவி கருமாரி அம்மனின்



திருவருளை நாடும்

## எம்.ஏ. இராஜா

மண்ணூர்ப் பேட்டை,
அருள்மிகு தேவி கருமாரியம்மன்
திருக்கோயில்
படக்கடை விற்பனை நிலையம்
சென்னை - 600 077
தொலைபேசி எண் 3114 6750




